The Himālayan Tranquillity within *Sri Rāma Tāraka Mantra*! 532

*Sadguru Svāmin* abiding in the deep silence of the snow mountain of the mind! 533

The lofty Himālaya of *Nāda*, called Śrī Tyāgarājasvāmī! 534

The Himālaya (King of mountains) of songs of praise of the King[67] of the solar dynasty! 535

The One by whose lofty thoughts the lofty Himālaya is won over in grandeur! 536

My *Guru Deva*, the lofty Himālaya in the inner sky of my mind! 537

The *Saṅgīta Himālaya*, offered this *Himālaya Gadyam*! 538

The lofty Himālaya of Song, the Source of this *Gadya Gaṅgā*! 539

The Source of *Gāna Gaṅgā*, whose is this song of *Gadya Gaṅgā*! 540

The *Nāda Gaṅgā* flowing from the triple snow-peaks of emotion, melody and rhythm, being offered the praise *Gaṅgā Sahasram*[68] and worshipped with the *dīpārādhanā* of devotion! 541

The Sole Help for this helpless adherent of Thee! 542

The Unlimited Glory of the Himālaya of knowledge and the Gaṅgā of *Nāda* eulogised by these limited expressions! 543

The One who sang on the banks of Kāverī, celebrated on the banks of Gaṅgā! 544

The One manifested in the holy place of the five rivers – *Pañcanada* called Tiruvaiyāru, sung in the holy place of the river Gaṅgā, namely the Himālaya! 545

The Auspicious, Sacred Pair of Feet that ornament these mental blossoms of devotion/this disciple with a devoted mind! 546

The Auspicious, Sacred Pair of Feet ornamented by these mental blossoms of devotion/the devoted mind of this worshipper! 547

The Auspicious, Divine Pair of Feet making these mental blossoms of devotion fragrant/delighting this disciple with a devoted heart! 548

[67] Śrī Rāma

[68] The book *Gaṅgā Sahasram* by the author consisting of 1200 *śloka*s on the Gaṅgā

The One with Auspicious, Divine Pair of Feet by whom these mental blossoms of devotion are delighted in / the Auspicious Divine Pair of Feet delighted in, in these mental blossoms of devotion / the Auspicious Divine Pair of Feet delighted in by this disciple with a devoted mind ! 549

My *Ācāryā* please accept this child's prattle of adulation ! 550

*I seek shelter at Thy Sacred Pair of Feet!* 551

Please forgive my faults committed knowingly or unknowingly!

I do not know where else to go except Thee!

But for Thee, who else is my refuge!

O my All-in-all! Please grace me by granting Thy Vision!

Be Thou pleased to speak to me!

Please be with me for ever and for ever!

I shall not let go Thy Sacred Feet!

Please liberate me!

Please accept me, O Thou Auspicious *Ācārya*!

So be it!
Auspiciousness unto you!

Auspiciousness unto Śrī Tyāgarāja, the delightful Gaṅgā of *Nāda*; The One who delights in the Gaṅgā that is Śrī Rāma; The glory of this Gaṅgā of Names Divine / the One whose glory is the Gaṅgā of *Divyanāmakīrtana*s / the One whose Name is as glorious as the Gaṅgā.

***Oṁ***

श्रीः

## ***Sadguru Maṅgalāṣṭakam***

The One delighted with this *Himālaya Gadyam*; the One abiding in this *Himālaya Gadyam*; the One whose grace is this *Himālaya Gadyam*; Auspiciousness unto the *Guru Deva*! 1

The One whose auspicious attributes are lofty as the Himālaya; the One whose glory is high as the Himālayan peak; the One whose expressions and music flow as the Himālayan Gaṅgā; Auspiciousness unto the *Guru Deva*! 2

The One as tranquil as the Himālayan silence; the One whose purity is that of the Gaṅgā; the One who grants the Himālayan peace; Auspiciousness unto the *Guru Deva*! 3

The One who is sacred as the four Himālayan shrines; the One sung delightfully by Pushpa / the One whose lovely songs are sweet as the fragrance of flowers; the Sweet Songster of Nārāyaṇa; Auspiciousness unto Tyāgarāja! 4

The One whose songs are the *devadāru*s of the Himālaya; the One, the Divine Names in whose songs are sweet as the music of birds; the One whose *kṛti*s are the delightfully fragrant Himālayan breeze; Auspiciousness unto the *Guru Deva*! 5

The One who is the Himālayan lake of glassy surface; the One who is the lovely Himālaya reflected in the lake / the One who is the Himālaya of melody and rhythm; the One in whose voice abides the divine *Gaṅgā*; Auspiciousness unto the *Guru Deva*! 6

The One who manifests as the blue sky; the One who is the pure white cloud in it; the One who is delighted with this child's prattle; Auspiciousness unto the *Guru Deva*! 7

The One of Himālayan glory; the One whose songs are very lofty; Auspiciousness unto *Sadguru Tyāgarāja*, my All-in-all! 8

*OM*

# ஹிமாலயகத்யம் .

இமயத்திலுதித்த பனிகங்கையின் பண்ணினிமையான, ராகதாளத்தில் இமயமலேயே ஆன, இமயத்திலுதித்த இப்படைப்பின் உட்பொருளான, ஸ்ரீ த்யாகராஜ ஸத்குரு தேவ, தங்களை ஶரணடைகிறேன்.

ஓம்

ப்ரணவத்தின் உருவான, நாதப்ரம்மானந்தம் ஒளிர்விட்டு மின்னும் வெள்ளிச்சிகரம் கொண்ட, பணிந்திட்ட உள்ளத்தினை உயர்த்தி ஒளிபெறச் செய்யும் ஞான ஹிமாலயம் ஆன ஸத்குருதேவ! தங்களைச்சரணடைகிறேன். 1

அறிவின்பவெளியினை அளாவிடும் இசையின்பப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 2

பேரின்பமாம் உயர்ந்த வெள்ளிப்பனிமலைச் சிகரத்து உச்சநிலை எய்தும், பல திக்குகளிற் பரந்து விரிந்து பேரழகு நேர்த்தியுடை ஏழிசை ஒலிகளின் பகட்டணித் திரட்டான (ஸத்குருதேவ!) 3

சூழ்ந்திடும் பரிதாபப் பனிப்புகை மண்டலத்தின் நடுவே தோன்றி அகத்தூண்டுதல் எனும் தெய்வீகக் கிளர்ச்சியூட்டும், ஓங்கி உயர்ந்த பாட்டெனும் வெள்ளிப்பனிமலைச் சிகரமான (ஸத்குருதேவ!) 4

பிறவித்துயரெனும் பனிப்புகைப் படலத்தினால் போர்த்தப்பட்ட இறையுணர்வெனும் பனிமலைச் சிகரத்தைக் காணச்செய்யும் அறிவுக்கதிரான (ஸத்குருதேவ!) 5

ஆத்மானந்தம் எனும் பனிமலைத்தொடரின் தெள்ளிய நிர்மால்ய தர்ஶனத்தினை மறைத்திடும் இவ்வுலகத்தொல்லைகளாம் புகைப்படலத்தைக் கிழித்திடும் அறிவுக் கதிரவனான (ஸத்குருதேவ!) 6

உலகவாழ்வின் சிறுமைகளாம் முகிற்கூட்டங்கட்கு மேலே உயரத்தெரியும் அழகிய ஆத்மதர்ஶனமெனும் நாதப்பனிச்சிகரமான (ஸத்குருதேவ!) 7

நாதமெனும் அழகிய உயர்பனிச்சிகரத்தினை முத்தமிடும் ராகஎழிலெனும் அழகுசெய் கொண்டலான (ஸத்குருதேவ!) 8

உலகவாஸனைகளால் அலைக்கழிக்கப்பட்டு அலுத்துத் துன்புற்ற உள்ளத்தின் ஆத்மலயமெனும் ஆழ்ந்த அமைதித்யானத்தில் புலனாகும் ஆனந்தவெள்ளிப்பனிமலைத் தொடர்களுடை நாதஹிமாலயத்தின் தெளிந்த தூய அதிகாலைக்காட்சியான (நிர்மால்ய தர்ஶனமான) (ஸத்குருதேவ!) 9

இடர்களாம் மலைத்தொடர்களால் துன்புற்றுச் சோர்வடைந்த உள்ளத்தில் மகிழ்வொளி பரப்பிச் சிரித்திடும் நாதமெனும் வெள்ளிப்பனிமலைச்சிகரமான (ஸத்குருதேவ!) 10

ஒன்றிய உள்ளத்தினின்று காணப்பட்ட இவ்வுலக அனுபவங்களெனும் மலைத் தொடர்கட்கு அப்பால் புலப்படும் வெள்ளிப்பனிமலைத்தொடர்ச்சியாம் நாதப்ரம்மத்தின் தோன்றலான (ஸத்குருதேவ!) 11

எண்ணற்ற உலகியற்குழப்ப நெருக்கடியிற் கலங்கிய உள்ளத்தலத்தினின்று தொலைவில் தெரியும் அமைதித்தொடுவானிலோங்கிய மோனப்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 12

நாள்தோறும் தொடரும் எரிச்சல்களின் இரைச்சல்களைத் தாண்டிய, தொலை- விலுள்ள அமைதித்தொடுவானில் உள்ள மோனப்பனிமலையான (ஸத்குருதேவ!) 13

அன்றாட எரிச்சல்களாலும் இரைச்சல்களாலும் துன்புற்ற மனக்கண்முன் புலப்படும், அமைதிப்பனிமலையான மோனக்கோயிலின் காட்சியான (ஸத்குருதேவ!) 14

இவ்வுலகின் செவியுறவொண்ணா, கடினமான இன்னா ஒலிகளின் பேரிரைச்சலால் துன்புற்ற இவ்வுள்ளத்திற்கு இதமூட்டும் பனிமலை அமைதியான (ஸத்குருதேவ!) 15

இவ்வுலகின் பித்துப்பிடித்த, இன்னா ஒலிகளாம் அரக்கர்கூட்டத்திற்கு வெகுதொலைவில் உள்ள பேரமைதிப்பனிமலையான (ஸத்குருதேவ!) 16

இவ்வுலக வாழ்வின் வெம்மை, இன்னா ஒலிகள் இவற்றிற்கெதிரான தண்ணமைதிப் பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 17

உலகவாழ்வாம் மலைத்தொடர்கட்கப்பால் வெகு தொலைவில் மெய்யறிவாம் நீலவானினை அளாவும், இவ்வுலகிற்கப்பாற்பட்ட அமைதிப்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 18

இவ்வுலகவாழ்வின் மன உலைவுகளாம் பித்தூட்டும் கூட்டத்திற்கு வெகுதொலைவிலுள்ள அமைதியாம் உயர்பனிமலையான (ஸத்குருதேவ!) 19

இவ்வுலக அமளியினின்று தப்பும்படியான, இதமூட்டும் நாதப்பனிமலையின் தண்ணமைதியான (ஸத்குருதேவ!) 20

உலகவாழ்வெனும் இமயக்காட்டினின்று, அறியாமைப்புகைசூழ் விண்வெளியில் இலேசாகக் காட்சியளிக்கும் மெய்யறிவெனும் வெண்மலையான (ஸத்குருதேவ!) 21

உளச்சோர்வெனும் புகை மண்டலம் சூழப்பட்ட, இடர்களாம் மலைத்தொடர்கட்கப்பால் அறிவுவெளியில் உயர்ந்து காட்சியளிக்கும் மோன வெள்ளிப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 22

அறிவெனும் அகல்நீலவெளியினில் அமைதியாம் வெள்ளிப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 23

இப்பைத்தியக்கார உலகின் துன்பங்களினின்று ஒரே புகலிடமான அறிவமைதிப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 24

அறியாமையெனும் புகைமண்டலம் சூழ்ந்த உள்ளவெளியில் மெய்யறிவெனும் வெள்ளிப் பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 25

உள்ளுயர்வெனும் தலத்தினின்று காணப்படும் மெய்ஞானப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 26

எல்லையற்ற முழுநீலவானே உடலாகக்கொண்ட ஸ்ரீராமனை அலங்கரிக்கும் முத்து மாலைகளான தூய வெண்ணிய ஞானப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 27

எல்லையற்ற ஞானநீலவெளியினில் உயர்ந்தோங்கிக் காணப்படும் நாதவெள்ளிப் பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 28

உலகியல் நிகழ்வுகளாம் சிறுமலைத்தொடர்கட்கப்பால் உயர்ஞானவெளி நடுவே உயர்ந்தோங்கிய நாதவெள்ளிப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 29

வினைத்தொடர்ச்சியின் பொறிப்புகளால் துன்புறும் இவ்வுள்ளத்திற்கு இதந்தரும் அழகினிய பண்ணிசைப்பனிமலையான (ஸத்குருதேவ!) 30

உலகியல் அற்பநிகழ்ச்சிகட்கு வெகு உயரத்தில் மோனமெனும் மட்டிலா நீலவெளியில் நீண்டுயர் நாத வெள்ளிப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 31

மெய்யறிவெனும் உயர்தலத்தினின்று புலப்பட்டுப் பேருவகையூட்டும் நாதப்பனிமலைத் தொடரான (ஸத்குருதேவ!) 32

பாட்டெனும் வானின் பண்ணெனும் அடர்நீலவண்ணத்தினை அளந்திடும், ஞான வெள்ளி ஒளி வீசும் நாதப்பனிமலை உச்சியான (ஸத்குருதேவ!) 33

உள்ளாழ் அமைதியில் தெளிந்த உள்ளத்து இறையன்பெனும் நீலவானிலோங்கி உயர்ந்து ஒளியூட்டும் நாதப்பனிக்கோயிற்காட்சியான (ஸத்குருதேவ!) 34

ஆன்ம உணர்வெனும் தெண்ணீல வானில் நாத வெள்ளிப்பனிமலை உச்சியின்மேல் தூய ஸத்துவ வெண்முகிலான (ஸத்குருதேவ!) 35

தொலைவிலுள்ள அமைதித்தொடுவானில் மோனப்பனிமலையை வெள்ளியென ஒளிரச் செய்யும், சுடரொளிவீசும் ஞானக்கதிரவனை (ஸத்குருதேவ!) 36

தொலைவிலுள்ள அமைதித்தொடுவானில் மோனப்பனிக்கோயிலினை வெள்ளி, தங்கம், இளஞ்சிவப்பு, சிவப்பு எனப் பண்கதிர்களால் வண்ணம் தீட்டும் (ஸத்குருதேவ!) 37

நாதமாம் நீலவானின் எல்லையில் மோனப்பனிமலை நீடமைதியின் வெண்ணிய ஒளியான (ஸத்குருதேவ!) 38

நாதமாம் அடர்நீலவெளியில் ஒளிரும் மோனப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 39

உணர்ச்சி, பண், லயம் இவற்றால் செவ்வொளியுடன் திகழும் மோனப்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 40

உள்ளாழ்ந்து ஒன்றுபடலெனும் அடர்நீலவானில் கவிதை எழிலினால் செம்மை, பொன், வெள்ளி என வண்ணங்கள் ஒளிரும் நாதத்தின் கண்கவர் பொற்சிறப்பினையுடைய, எழில்சேர்க்கும், அமைதியெனும் இமயமலைத்தொடர் முழுமையான (ஸத்குருதேவ!) 41

உள் அமைதியெனும் இமயமலைத்தொடர் நீள்வரை உச்சியினின்று காணப்படும் இறையறிவு எனும் பொற்சிகரமான (ஸத்குருதேவ!) 42

பண்ணெனும் உயர்ந்த இமயமலைச்சாரலின் அடர் அமைதியில் கட்புலனாகும் கடவுளின் தோற்றமான (ஸத்குருதேவ!) 43

எண்ணமலைத்தொடர்மடிப்புகட்கப்பாற்பட்ட அமைதியெனும் பனிமுகட்டொளியான (ஸத்குருதேவ!) 44

அடர் அமைதியெனும் இமயப்பள்ளத்தாக்கில் கானத்தென்றலின் மென்னொலியான (ஸத்குருதேவ!) 45

அடர் அமைதியெனும் இமயத்தில் கானமழை பொழிமுகிலான (ஸத்குருதேவ!) 46

மோனத்யான மனமாம் இமயத்தில் ஞானமெனும் அடர்நீலவானில் அடர் கானமழை பொழியும் 'ஓம்'காரக் கருமுகிலான (ஸத்குருதேவ !) 47

த்யானமெனும் இமய அமைதியில் அருவிச்சலசலப்பாம் இன்னிசைக்குரலான (ஸத்குருதேவ !) 48

உள்ளாழ்தலாம் மோனப்பனிக்கோயிலில் பாட்டருவிப்பொழிவாம் தெய்வீகக்குரலான (ஸத்குருதேவ !) 49

நிந்தன் க்ருதிகளாம் அருவிகள் முத்துமாலைகளாக ஒளிரும் நாத இமயமலையான (ஸத்குருதேவ !) 50

உள்ளாழ்தலெனும் இமயத்தில் இசையெனும் ஆற்றின் தோற்றுவாயான, இறையனுபூதி எனும் படிகத்துளிகள் கண்ணடி போன்ற மேற்பரப்பில் தொடர்நடமிடும், பளிங்குபோல் தெளிந்த ஆழமைதிக்குளமான (ஸத்குருதேவ !) 51

பரமாத்மாவைத்தேடும் பனிமலைக்காட்டினில் வெள்ளித்திவலைகளாய்த் தெளித்துச்சிதறிவிழும் இன்னிசைநீர்வீழ்ச்சியான (ஸத்குருதேவ !) 52

தூய எண்ணங்களாம் உறைபனியால் எப்பொழுதும் வெண்ணிறமாயும் இறைவன் திருநாமத்தை உரைத்துப்பாடிடுதலால் பொன்னும் வெள்ளியுமாய் மின்னிடும் ஒளிபெற்று விளங்கும் நாதப்பனிமலைமுகடான (ஸத்குருதேவ !) 53

விண்ணினை அளாவிடும் பண்ணெனும் உயர்பனிக்கோயிலான (ஸத்குருதேவ !) 54

விண்ணினின்றிழிந்திட்ட பண்ணெனும் கங்கையே ! 55

மோனநீடமைதிப் பனிமலைநீர்வீழ்ச்சியாம் தேனினிய கானகங்கையான (ஸத்குருதேவ !) 56

உணர்ச்சி, பண், ஒலியொழுங்கு எனும் மூன்று பனிமலை உச்சிகளில் தோன்றிய நாத இன்பமாம் கீதகங்கையான (ஸத்குருதேவ !) 57

பனிமலை இன்பமான, ஆழ்ந்திசைக்கும் ஞானகங்கையான (ஸத்குருதேவ !) 58

உள்ளப்பனிமலையிற்பெருக்கிடும், எல்லையற்ற இன்பமெனும் நாத கங்கையான (ஸத்குருதேவ !) 59

உள்ளப்பனிமலையில் லய ஒழுங்குடன் ஆழ்ந்திசைக்கும் நாதகங்கையின் அடர் அமைதியான (ஸத்குருதேவ !) 60

ஹிமாலயகத்யமெனும் இக்கங்கை பெருக்கிடும், இவ்வுள்ளத்தில் ஒன்றிய ஹிமாலயமான (ஸத்குருதேவ !) 61

உள்ளத்து இமய அமைதியில் ஒன்றிடும் த்யானமெனும் 'ஓம்'கார ஸ்ருதியுடன் கோமுகத்தினின்று பாய்ந்தோடிவரும் கானகங்கையுடன் நாதமாம் இமயத்தின் ஈடிணையற்ற, தனித்தன்மைவாய்ந்த திவ்யானுபவமே ஆன (ஸத்குருதேவ !) 62

இந்த பக்தையின் கண்ணீர்கங்கையால் மென்மையாக வருடப்பட்டு அபிஷேகிக்கப்பட்ட திருப்பாதங்களேயே அடிவாரமாகக்கொண்ட, நாதமெனும் உயர் இமயமலைச் சிகரமான (ஸத்குருதேவ !) 63

பலவகைப்பட்ட ஆத்மானுபவங்கள் எனும் இமயமலைத்தொடர்களினின்று இழிந்தோடும் அநுராகமெனும் க்ருதிகங்கையின் 'ஓம்'காரஸ்ருதியாம் அமைதியுடன் கூடிய நாதப் பனிமலையின் இவ்வுலகிற்கப்பாற்பட்ட எல்லையற்ற எழிலான (ஸத்குருதேவ !) 64

உள்ளன்பெனும் ஸ்ருதியுடன், ரகுராமனின் திருநாமஒலியுடன் பாயும் தேனினிய கானமெனும் கங்கை பெருக்கிடும் பண்ணெனும் வண்ணப்பனிமலையின் வியன்தரு அழகான (ஸத்குருதேவ !) 65

நாதகங்கையின் 'ஓம்'கார ஒலியால் அளந்திடப்பட்ட அடர்ந்த உள்ளமைதியுடன், அளவற்ற ஞானவெளியின் வண்ணமாம் அடர்நீலத்தினை அதிகரிக்கும் தூயஸத்துவ வெண்பனிக் கோயிலான (ஸத்குருதேவ !) 66

மோனமனப் பனிக்கோயிலினில் த்யானலயத்துடன் பண்ணெனும் கங்கையின் 'ஓம்'காரநாதமான (ஸத்குருதேவ !) 67

உள்ளப்பனிமலை அமைதியைக் கூட்டிடும் இனிய கானகங்கையின் ஒலியான (ஸத்குருதேவ !) 68

உலகச்சேற்றின் அழுக்கைக்கழுவி தனிமை அமைதியின் இன் நலம் அளிக்கும் நாத கங்கையான (ஸத்குருதேவ !) 69

இவ்வுலகின் இன்னாத பேரோசைகளினின்று தப்ப ஒரே அடைக்கலமான, இனிய கானகங்கையின் அலையான (ஸத்குருதேவ !) 70

ஞான இமய அமைதியில் நாதப்பனிமலையில் பிறந்த, இறையன்பும் எல்லையற்ற சொற்செல்வமும் பெருக்கெடுத்தோடும் கங்கைவெள்ளமான (ஸத்குருதேவ !) 71

அடர் அமைதியெனும் இமயப்பள்ளத்தாக்கினில் பொழியும் கானகங்கை நீர்வீழ்ச்சியான (ஸத்குருதேவ!) 72

உள்ளத்து அடர் அமைதியெனும் ஆழ்ந்த உள் ஹிமாலயத்தில் ஸ்ரீ ராமதாரகமந்த்ரமே கங்காஸ்ருதியாக ஒலிக்க, ஆழ்ந்து எதிரொலிக்கும் இன்னிசைக்குரலான (ஸத்குருதேவ!) 73

உள்ளப் பனிமலையின் அடர் அமைதியில் த்யானமெனும் கங்கையில் ஒளி வீசும் ஞான ஸூர்யனுன (ஸத்குருதேவ!) 74

நாமத்யானமெனும் பனிகுகையிற்பிறந்த கானகங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 75

ஸ்ரீராமதாரகமந்த்ரத்தின் உள்ளமைதிலயமெனும் பனிமுகட்டிற்பிறந்த திவ்ய கிருதி கங்கைவெள்ளமான (ஸத்குருதேவ!) 76

ஸ்ரீராமனெனும் சந்த்ரனின் நாமமாம் ஒளி பளபளக்கும் நாதமாம் முழுமை இன்ப கங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 77

பக்தையின் உள்ளன்புடை இவ்வெண்ணங்களாம் கங்கையில் / பக்தையின் அன்புள்ளமெனும் கங்கையில் சிரிக்கும் இன்னிசை நிறைமதியான (ஸத்குருதேவ!) 78

ஸ்ரீராமனும் கதிரவனின் பேரின்ப ஒளிக்கதிர்களால் பொன்னென மின்னும் சொல்லிசைமெட்டின் அழகு செறிந்த பண்ணிசைக்கங்கையின் இன்பமான (ஸத்குருதேவ!) 79

இறையுணர்வின் அளவற்ற எல்லையில்லா இன்பத்தினின்று அழகிய சொற்களாகவும் இன்னிசை ஒலிகளாகவும் பெருக்கெடுத்துப் பாயும் பொன்னெழில் மிக்க கீர்த்தனைகளாம் கங்கை தரும் களிப்பான (ஸத்குருதேவ!) 80

இவ்வுலகவாழ்வின் பொறிப்புகளைக் கழுவிடும் ஒரெ வழியான, தெய்வீகமான பனி கங்கையாம் பாட்டு வெள்ளமான (ஸத்குருதேவ!) 81

பிறவித்துயரால் துன்புறும் இவ்வாத்மாவை வரவேற்று இன்பப் பண்ணிசைக்கும், அறிவு, துறவு எனும் வெள்ளிகங்கையான / பிறவித்துயரினுல் துன்புறும் இவ்வாத்மாவை வரவேற்று அறிவிசை இன்பம் தந்தருளும் ஸ்ரீத்யாகராஜர் எனும் கங்கையான (ஸத்குருதேவ!) 82

உள்ள வெம்மையைத் தணித்திடும் மோனத்யானமாம் பனியினின்று பெருகிடும் குளிர்ந்த இன்னிசைகங்கையான (ஸத்குருதேவ !) 83

எண்ணங்களெனும் அடர்கற்களை உடைத்தெறிந்து, நாதப்போக்கின் விரைவினால் உள்ளொன்றிடச் செய்விக்கும் பண் கங்கையான (ஸத்குருதேவ !) 84

மெய்யறிவாம் பனிமலையில் பிறந்த, விரைவுப்பெருக்கெடுத்தோடும் இன்னிசை கங்கையான (ஸத்குருதேவ !) 85

இவ்வன்பு உள்ள உணர்வுகளின் பல்வண்ணங்களில் ஒளிரும் ஞானகங்கையான (ஸத்குருதேவ !) 86

என்றும் குறையாத தூய அமிழ்தினிய கானம் பெருக்கெடுத்தோடும் புண்ய கிருதி கங்கையான (ஸத்குருதேவ !) 87

பக்தியாம் பனிமலையின் தெய்வீக அமைதியே ஶ்ருதியாகக்கொண்ட கிருதிகங்கையான (ஸத்குருதேவ !) 88

நாதத்தின் ஆத்மானந்தானுபவமே 'ஓம்'கார ஶ்ருதியாகக் கொண்ட பாட்டெனும் பனி கங்கையான (ஸத்குருதேவ !) 89

ஸ்ரீராமனும் ஸூர்யனின் நாமங்களாம் ஆயிரம் கதிர்களால் பொன்னொளிரும் வாக்கு கங்கையான (ஸத்குருதேவ !) 90

ஸ்ரீராமநாமத்தின் இடைவிடா ஸ்மரணமாம் சுடர்விடும் ஒளியினால் வைரத்தை வெள்குறச் செய்திடும் அழகுமிகு வண்ணப்பண்கங்கையான (ஸத்குருதேவ !) 91

ஸ்ரீராமனெனும் பகலவனால் வெள்ளியென மின்னும் பண்ணெழில் கங்கையான (ஸத்குருதேவ !) 92

ஸ்ரீராமனும் ஸூர்யனால் அழகுறச் சிரித்து நடமிடும் பண்ணிசைப் பொன்கங்கையான (ஸத்குருதேவ !) 93

உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக்கும், பற்பல திவ்யநாமங்களின் நானாவண்ணங்களிலும் பண்ணும் பேரன்பும் ஒளிரும் பேரறிவுப்பண்கங்கையான (ஸத்குருதேவ !) 94

உள்ளத்தைக் களங்கமின்றி அசைவற்றதாகச் செய்யும், பண்ணிசைலய அறிவினையும் மெய்யறிவையும் அளித்திடும், நாதப்பனிமலையினின்றிழிந்திடும் திவ்யநாம கீர்த்தனைகங்கையான (ஸத்குருதேவ !) 95

நாதப்பனிக்கோயிலினின்று அமிழ்தெனப் பாய்ந்திடும், திவ்யநாமங்களின் ஸாரமான அமிழ்தே ஆன பண்கங்கையான (ஸத்குருதேவ!) 96

ராமநாமஸாரமே பருகிடும் அமிழ்தாக, திவ்யநாமகானமே திளைத்திடும் மகிழ்வான கீர்த்தனகங்கையான (ஸத்குருதேவ!) 97

(நின்னை) த்யானித்தலே நீராடும் மகிழ்வாயும் (நின்) திருநாமங்களை/(நிந்தன்) திவ்யநாமகீர்த்தனங்களைப் பாடுவதே பருகிடும் அமிழ்தாயும் அமைந்த அமுத கங்கையான (ஸத்குருதேவ!) 98

(நின்னை) நினைதலே கங்கைநீராடலாகவும், (நின்) திருநாமங்கள்/ (நிந்தன்) திவ்யநாமகீர்த்தனங்கள்—பாடிடலே தவமாகவும் யாகமாகவும் கொண்ட இம்மகளுக்குத் துன்பங்களைப் போக்கி இன்பத்தை வருவிக்கும் அறிவிசைப்பண் கங்கையான (ஸத்குருதேவ!) 99

மங்களமான உமாதேவி மகிழ்ந்திடும் ஶிவனின் மகிழ்வான ராமனும் இமயத்தில் மகிழும், இன்பத்தின் சோலையான/ நந்தனின் மகிழ்வான (கண்ணனுய் அவதரித்த)—அழகிய ராமனின் நாமகங்கையான (ஸத்குருதேவ!) 100

உலகியற்றுன்பங்களையும் தீவினைதனையும் அழித்திடும், ராம க்ருஷ்ண நாமங்களாக ஓடிடும், நாமகானமாகிய அமுதகங்கையான (ஸத்குருதேவ!) 101

உலகியல் தாகத்தைத் தணித்திடும், மன அமைதி நல்கிடும் இறைவன் திருநாமத்யானமாம் இமயத்தினின்று பொழிந்திடும், அமுத கானகங்கையான (ஸத்குருதேவ!) 102

இப்பைத்தியக்கார உலகின் அமளியினின்று வெகுதொலைவாகி வேறுபட்ட, உயரிய ராமபக்தி எனும் இமயத்தினின்று நாமகானம் எதிரொலித்திடும் பண்கங்கையான (ஸத்குருதேவ!) 103

இவ்வுலகவாழ்வினுல் துன்புறும் இந்த பக்தைக்கு என்றுமுள்ள பண்கங்கையான (ஸத்குருதேவ!) 104

ஸ்ரீராமனின் ஆயிரக்கணக்கான நாமவரிசைகள் தொடர்மழையாகப் பொழியும் வெள்ளமான, இன்பத்துடன் ஒன்றுபட்ட க்ருதித் தொகுதியாம் கங்கையான (ஸத்குருதேவ!) 105

துன்பமெனும் குளிர்காற்றுக்குக் கதிரவனின் வெம்மை இதமமைந்த திருநாமங்களுடன், திளைத்தற்கின்பந்தரும், கானப்பொழிவான, தங்குதடையற்ற சொற்செல்வ கங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 106

நின்னிடம் தனித்த பக்திபூண்ட இவ்விதயத்தில் கரைபுரண்டோடும் இன்னிசை கங்கையே! 107

இந்த ஶிஷ்யக்குழந்தையைத் தாலாட்டும், எல்லையில்லா இன்பம்தரும், ஆழ்ந்தொலிக்கும் கான அலைகள் நிறை நாதகங்கையான (ஸத்குருதேவ!) 108

இவ்வுலகவாழ்வின் பேரிரைச்சல்களில் துன்புற்ற இத்தனி ஶிஷ்யைக்குத் திளைத்தலின்பமான தண்ணிய பண்கங்கையான (ஸத்குருதேவ!) 109

(நினது) நாத இன்பமாம் கங்கைஅலைகளினுல் நனைக்கப்பட்ட, தனித்த, நின்னையே உபாஸிக்கும் இப்பக்தையையுடய (ஸத்குருதேவ!) 110

ஶ்ரீராமனும் சந்த்ரனின் புன்னகையில் வெள்ளியெனப் பளபளத்து மின்னும் வாக்கெனும் வெள்ளம் இன்னிசை இன்பமெனும் வெண்புகைப்படலத்தால் சூழப்பட்ட, மங்களமான, தூய்மையாம் வெண்ணிற க்ருதிகங்கையான (ஸத்குருதேவ!) 111

ஶ்ரீராமனும் அடர்நீலமலையின் எழில் உருநிழற்படிவுடை, தெள்ளத்தெளிந்த கண்ணுடியாம் மேற்பரப்புடை, பண்ணிசைகங்கையான (ஸத்குருதேவ!) 112

மெய்யறிவாம் ஆழ்நீல நிறங்கொண்ட எழிலுரு பண்ணிசைகங்கையான (ஸத்குருதேவ!) 113

ஸத்துவத்தின் வெள்ளொளி படைத்த புண்ணியகங்கையான (ஸத்குருதேவ!) 114

இறையுணர்வு, அன்பு முதலான பலவகை உணர்வுகள், பண்ணினிமை இவற்றின் வெண்மை, இளநீலம், முகில்வண்ணம், பசுமை, ஆழ்நீலம், மஞ்சள், செம்மஞ்சள்— இந்நிறங்களில் பொன், வெள்ளி ஒளியுடன் மின்னும் ஏழு இன்னிசை ஒலிகளின் (ஸப்தஸ்வரங்களின்) வித்தை களியாட்டமிடும் இன்பண் எழில் கங்கையான (ஸத்குருதேவ!) 115

விடியுமுன் நீராடல் முதல் மாலை உள்ளாழ்தல் வரை துய்த்துணரப்பட்ட, பண்ணிசைப் பலவண்ணங்களுடன் தாள ஒழுங்கு நடமிட்டு ஒளிரும் நாதகங்கையான (ஸத்குருதேவ!) 116

குயில் பாட மயிலாடும் பசுநீலச் செம்மையுடன் பலவண்ண எழிலுடைப் பண்கங்கையே! 117

துன்புற்ற மனதிற்கிதம் தந்து உள்ளுயிர்ப்பளித்திடும் தண்கங்கையே! 118

என்றும் வற்ரு கானகங்கையுடைய நாதஹிமாலயமான (ஸத்குருதேவ!) 119

நாதஹிமாலயத்தில் நாமகங்கையின் இன்னொலியான (ஸத்குருதேவ!) 120

உள் ஆழ் இமய அமைதியில் நாதகங்கையின் இன்னொலியான (ஸத்குருதேவ!) 121

முகில்முழக்கம் போல் ஆழ்ந்த இன்னிசையாம் கங்கையின் ஒலிக்கு அடர்மௌன ஸ்ருதியாம் 'ஓம்'காரமான (ஸத்குருதேவ!) 122

உள்ளத்து இமய அமைதியில் முகில்முழக்கமாய் இசைபாடும் கங்கைஒலியான (ஸத்குருதேவ!) 123

உள்ள இமயத்து அடர் அமைதியில் ஒலி இனிமையான (ஸத்குருதேவ!) 124

இவ்வுலகின் இடைவிடா, கடுப்பூட்டும் இன்ன ஒலிகளின் கொடும் துன்பத்தினைத் தணித்திடும், ஞானப்பனிமலை அமைதியினில் நாதகங்கையின் இன்னொலியான (ஸத்குருதேவ!) 125

சூழ்ந்து எரிச்சலூட்டும் கடும் ஒலிகளுடன் போராடும் துன்பத்திற்கு மருந்தான நாதப்பனிமலை அமைதியான/நாதத்தினுள்ள பனிமலை அமைதியான (ஸத்குருதேவ!) 126

இவ்வுலகியல் பேரிரைச்சலினல் பெருந்துன்புறும் இவ்வாத்மாவின் புகலிடமான இமய அமைதியான (ஸத்குருதேவ!) 127

ஞானப்பனிமலையின் அமைதிகொண்ட/ஞானப்பனிமலையின் அமைதியினில்– நாதமாம் இன்னொலியான (ஸத்குருதேவ!) 128

இனிய நாத உள்ளுயிர்ப்பாய்க் கிளர்ந்திடச் செய்யும் பனிமலை அமைதியான (ஸத்குருதேவ!) 129

இமய அமைதியின்/அமைதியில் இன்னொலியான (ஸத்குருதேவ!) 130

இமயத்து அடர் அமைதியில் இயற்கையின் மெல்லினிய ஒலிகளில் ஒளிந்துள்ள (ஸத்குருதேவ!) 131

உட்கலந்து ஊடுருவிப் பரந்த இமய மோன அமைதியான (ஸத்குருதேவ!) 132

உள்ளப்பனிமலையில் அறிவுப்பனிப்பொழிவுக்கு முன் உள் ஆழ் அடர் அமைதியான (ஸத்குருதேவ!) 133

அசையா உள்ளப்பனிமலையில் அமைதியெனும் பனிப்பொழிவான (ஸத்குருதேவ!) 134

நீடமைதி மிக்க உள்ளப்பனிமலையில் மெய்யறிவுப் பனிப்பொழிவான (ஸத்குருதேவ!) 135

அறிவுப்பனிமலையில் இசைப் பனிப்பொழிவான (ஸத்குருதேவ!) 136

செம்மை, செம்மஞ்சள், தங்கம், வெள்ளியென மின்னும் இமயத்தின் பனிச்சிகரங்களில் ஒளிரும் பரஞ்ஜோதிமயமான, தொடர்ப்பேரின்பவடிவான (ஸத்குருதேவ!) 137

கீர்த்தனைகளாம் பனிக்கோயிலினை அணிசெய்யும் இறைவன் திருநாமங்களாம் பனிப்பொழிவான (ஸத்குருதேவ!) 138

நாதமலையின் நாமப்பனிமுகடான (ஸத்குருதேவ!) 139

இறைவன் திருநாம இன்பமெனும் வெள்ளிப்பனிமலை உச்சியினின்றிழிந்தோடிவரும் இசையின்பமாம் கங்கைவெள்ளமான (ஸத்குருதேவ!) 140

ஞானமாம் உயர் இமயத்தின் நாத இன்பமெனும் வெள்ளிமுகடான; வெள்ளிப்பனிமலை உச்சியிலுறைவோன் மகிழும்/வெண்மதியினைத் தலையிலணிந்தோனுக்கு மகிழ்வான – நாமத்தின் இன்பமான / இன்பத்தையுடைய (ஸத்குருதேவ!) 141

பக்தையின் உள்வானில் எப்பொழுதும் காட்சியளிக்கும், காலனைக்காலாலுதைத்தவன் மகிழும் நாமத்தினுல் வெள்ளியென மின்னும் நாதப்பனிமலை உச்சியான (ஸத்குருதேவ!) 142

ஸ்ரீராமனும் சந்த்ரனின் இன்பமெனும் கதிர்களால் பொன்னொளியோடு மின்னும், மெய்யறிவாம் நிலைபனியுறையும், இசையெனும் வெள்ளிமுகடான (ஸத்குருதேவ!) 143

ஸ்ரீராமசந்த்ரனும் ஆதவனுல் பொன், வெள்ளியென மின்னும் நாதப்பனி முகடான (ஸத்குருதேவ!) 144

ஸ்ரீராமனும் சந்த்ரனினுல் பொன், வெள்ளி மயமாக மின்னும் நாதப்பனிமலைக் கோடான (ஸத்குருதேவ!) 145

ஸ்ரீராமசந்த்ரனின் நாமக்கதிர் தரும் இன்பம் வெள்ளி ஒளியுடன் சிரிக்கும், நாதமாம் தண்பனிமலைமுகடான (ஸத்குருதேவ!) 146

எல்லையில்லா நீலவெளியே உடலான ஸ்ரீராமனைத் தொடும் நாதமாம் உயர்வெள்ளிப் பனி உச்சியான (ஸத்குருதேவ!) 147

இறையுணர்ந்தறிவெனும் நீலவானினை அளாவும் நாமகானமேம்பாடாம் உயர் பனிமலையான (ஸத்குருதேவ!) 148

உள்ளாழ்தற்பனிமலையில் மெய்யறிவமைதிப்புலரியான (ஸத்குருதேவ!) 149

மெய்யறிவெனும் இமயக்காட்டில் அமைதியின் இன்குரலான (ஸத்குருதேவ!) 150

மோனமனமெனும் இமயப்புலரியின் அமைதியில் இன்னிசைப்புள்ளான (ஸத்குருதேவ!) 151

இமயப்புலரியின் பேரமைதி எழிலினை வளர்த்திடும் அழகினிய பண்ணிசைப்பறவையான (ஸத்குருதேவ!) 152

மெய்யறிவுப் பனிமலை அமைதியில் மோனவானில் சிறகடித்துப் பறந்தெழும்பும் தேனிசைப் பறவையான (ஸத்குருதேவ!) 153

மெய்யறிவுப் பனிமலையில் மோனவனத்தில் இன்குரல் ஒலிக்கும் தேனிசைப் பறவையான (ஸத்குருதேவ!) 154

உள்ளத்து இமய அமைதியில் இன்னிசைப்புள்ளான (ஸத்குருதேவ!) 155

இமயத்து அமைதியுடை உள்ளத்தே எழும்பிப் பறக்கும், மிகமெல்லினிய அமுத இசைபாடும், தெய்வப்புள்ளான (ஸத்குருதேவ!) 156

பண்ணெழில் வண்ணத்து இன்னிசை கங்கையின் மேல் பேருண்மையாம் இறக்கை விரிக்கும் ஸத்துவத் தூய வெண்புள்ளான (ஸத்குருதேவ!) 157

இறையன்பெனும் இமயத்தில் உணர்ச்சி, பண், தாளம், மெய்யறிவு இவற்றின் செம்பொன் வெள்ளி நிறங்கள் அழகுறும் நாதக்கதிரவனின் உதயமான (ஸத்குருதேவ!) 158

அளவிறந்த க்ருதிகளெனும் ஹிமாலயத்தின் ஸங்கதிகளாம் பனிச்சிகரத்தில் வைரமென ஒளிரும் ஞாயிறின் துளியாம் திவ்யநாமமான (ஸத்குருதேவ!) 159

நாத வெள்ளிப்பனிமலையில் பண்ணெழிற் பகலவனின் பொற்கதிர்த்துளியான (ஸத்குருதேவ!) 160

க்ருதிகளெனும் இமயக்காட்டினிலே மெய்யறிவுக் கதிரவனின் ஒளியில் பாட்டிலைகள்மேல் பளபளக்கும் கவிதை எழிலெனும் வைரப்பனித்துளியான (ஸத்குருதேவ!) 161

நாதப்பனிமலையில், கானப்பொற்கதிர்களுடனொளிரும் ஞானஸூர்யனை (ஸத்குருதேவ!) 162

அருட்கிளர்ச்சியின் மூலமான, கவிதை உணர்வு பொன்னென மின்னும் நாதப்பனிமலைத் தொடரின் எல்லை கடந்த மேலான எழிலான (ஸத்குருதேவ!) 163

உளச்சோர்வெனும் பனிமூட்டத்திற்கு வெதுவெதுப்பான மெய்யறிவுக்கதிரவனை (ஸத்குருதேவ!) 164

மெய்யறிவுப் பனி உச்சியினைப் போர்த்திடும் எண்ணப்புகைமூட்டத்தினைக் கிழித்திடும், இசையொலிக் கதிர்கள் கொண்ட பண்ணிசைப்பகலவனே!165

இவ்வுலகியலின் நிலையற்ற இன்பங்களில் மயங்கும் அறியாமை இருளினை அகற்றிடும், நாதப்பனிமலைமேல் ஞானமெனும் காலைக்கதிரவனை (ஸத்குருதேவ!) 166

பண்ணெழிற் பனிமலையில் இறையன்பாம் மரங்களின், நுண்ணிய உணர்வுகளாம் இலைகளின் ஊடே வடிகட்டப்பெறும், ஞானவெளியின் கானக்கதிரவனை (ஸத்குருதேவ!) 167

அறியாமை இருளால் சூழப்பட்ட மனமெனும் பனிமலை வனத்தினை ஞான ஒளிக்கற்றையினால் சூழும் மெய்யறிவுப்பகலவனை (ஸத்குருதேவ!) 168

பலவகைப்பட்ட இறையுணர்வுகளெனும் இமயமலைச் சரிவுகளை அறிவுக்கதிர் கொண்டு ஒளியூட்டும் இசையின்பப்பகலவனை (ஸத்குருதேவ!) 169

அறிவுக்கதிர்க்கற்றைகளின் ஒளிப்படலம் சூழப்பெற்ற, க்ருதித்தொகுதிகளெனும் பனிமலைத்தொடர்களின், நாதப்ரம்மானந்தம் எனும் வெள்ளிச்சிகரமான (ஸத்குருதேவ!) 170

மாசுற்ற மனதிற்குக் கண்கூசும் ஒளிமிக்க பகலவனை (ஸத்குருதேவ!) 171

தவமெனும் மலையுச்சியில் பளபளக்கும் தூய்மைப்பனியான (ஸத்குருதேவ!) 172

ஸூர்யசந்த்ரர்களையே கண்களாகக் கொண்டோனில் ஒன்றும் இன்பம் (இறையின்பம்) வெள்ளியென ஒளிரும், இறையன்பும் பண்ணழகுமான வெண்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 173

இறையன்பெனும் நீலவானின் எழிலுக்கு எழில் கூட்டும் இசைப்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 174

பண்ணிசை வெண்பனிக்கோயில் வெள்ளியாய் மின்னிடலைக் கூட்டிடும் மெய்யறிவுக் கதிரவன் ஒளிரும் இறையன்பாம் நீலவானாகிய (ஸத்குருதேவ!) 175

அழகுணர்ச்சியெனும் எல்லையில்லா நீலவானினை அளாவும் பண்ணெனும் பனிமலையில் ஒளிரும் ஞானக்கதிரவனான (ஸத்குருதேவ!) 176

ஞானமெனும் நிலைத்த வெண்பனி ஆடை வெள்ளியென மின்னும், வாக்கெனும் பனிமலையின், இசை, இறையன்பு இவையாம் எழிலான (ஸத்குருதேவ!) 177

ஶ்ரீராமனெனும் பகலவன் கதிரினால் வண்ணமயமாக ஒளிரும் இறையன்பினால் வெள்ளிமயமான, பண்ணினிமையெனும் எழிற்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 178

இறையன்பெனும் வெண்பனிமுகட்டில் மிதக்கும் பண்ணெனும் வெண்முகிலான (ஸத்குருதேவ!) 179

ஞானமாம் வெண்மேகம் தவழ்ந்திடும் பண்ணெனும் வெண்பனிக்கலஶம் எல்லையில்லா இறையுணர்வெனும் நீலவானினைத் தொட்டிடும் நாதவெண்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 180

ஞானமாம் தூய வெண்பட்டாடை வாக்செல்வத்தினால் வெள்ளியாக ஒளிரும், ஸரஸ்வதியின் இருப்பிடமேயான நாதவெண்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 181

நீலமேகஶ்யாமளனான ஶ்ரீராமனின் திவ்யானுபவமெனும் நீலவானினை அளாவிடும் நாமகானமாம் உயர்பனிமலையான (ஸத்குருதேவ!) 182

தெய்வத்தன்மையெனும் அடர்நீலவானினைத் தொடும் நாதப்பனிமலையின் அழகாம் வெள்ளி முகடான (ஸத்குருதேவ!) 183

நீடமைதியாம் எல்லையற்ற அடர்நீலவானில் உயர்ந்தோங்கிய மிக்க உள்ளின்பப் பனியுச்சியான (ஸத்குருதேவ!) 184

பேரமைதியெனும் அடர்நீலவானளாவிய, ஒளிவீசும் உயர்நாதப்பனிமலையான (ஸத்குருதேவ!) 185

நாதப்பனிமுகட்டினை முழுக்காட்டிடும் மெய்யறிவு ஒளியே! நல்லறிவினைத் தெள்ள விளக்கும் ஸத்குருவே! 186

மெய்யறிவொளிப்படலத்தால் முழுக்காட்டப்பட்ட நாதப்பனிமலையின் உயர் உச்சியான ஸத்குருவே! 187

உள்ளுயிர்ப்பின் வித்தான, நாதப்பனிமலைத்தொடர்தனில் வெள்ளியென ஒளிரும் கவிதைக் கிளர்ச்சியின் வியனெழிலான (ஸத்குருதேவ!) 188

வாழ்வுப்பயணத்தில் பற்பல அநுபவங்களெனும் மலைத்தொடர்கட்கப்பால் அத்புதமான ஆத்மானுபவமாம் நாதப்பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 189

மோனமெனும் எல்லையில்லா வெளியினில் இவ்வுலகிற்கப்பாற்பட்ட இன்பப்புல்லரிப்புச் செய்திடும் நாதவெள்ளிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 190

பண்ணிசைப்பனிமலையில் க்ருதிகளாம் தேவதாருகளின் அருந்திறனெனும் இலைகள் வழி வடிகட்டப்பெறும் காலைப் பொன்னொளிக் கதிர்படைத்த மெய்யறிவுப்பகலவனை (ஸத்குருதேவ!) 191

மிகமென்மையான இறையன்பு, பண்திறன் இவற்றின் மணம்படைத்த க்ருதிகளாம் தேவதாருக்காட்டின் எல்லையில் இறையுணர்வெனும் பனிமலைச்சரிவில் பளபளக்கும் மெய்யறிவுப்பகலவனை (ஸத்குருதேவ!) 192

இவ்வுலகியற்துன்பங்களெனும் கொடும்பனிக்காற்றினின்று காத்திடும், இறைவன் திருநாமங்களின் இன்மணம் கமழும், நாததேவதாரு வனத்தில், தனித்தன்மை வாய்ந்த க்ருதிகளாம் கொடிவீடான (ஸத்குருதேவ!) 193

ஶரணடைந்த இவ்வுள்ளத்தின் கொடுந்துன்பங்களின் வெம்மையைத் தணித்திடும், அமைதியான உள்ளமெனும் இமயமலையில், இசையின்பமெனும் தெய்வீக நறுமணம் கமழும் நாததேவதாரு வனவீடாகிய (ஸத்குருதேவ!) 194

மனமெனும்/இவ்வெண்ணங்களெனும் இமயமலையில் அழகுணர்வெனும் தேவதாருவின் இன்மணத்தில் இருக்கும் (ஸத்குருதேவ!) 195

உள்ளத்தின் இமய அமைதியில் நாதமாம் தேவதாருவின் தெய்வீக நறுமணமான (ஸத்குருதேவ!) 196

பண்ணெனும் பனிச்சரிவினில் இன்னிசை தேவதாருவின் நல்மணமான (ஸத்குருதேவ!) 197

ஆரவாரமற்ற உள்ளமெனும் இமயத்தொடரினில், ஓங்கி உயர்ந்த கான தேவதாருவின், நாம இன்நறுமணமான (ஸத்குருதேவ!) 198

இறையன்பெனும் இமயச்சாரலில் தெய்வீக இசையெனும் தேவதாரு நல் மணமான (ஸத்குருதேவ!) 199

கம்பீரமான க்ருதிகளெனும் அடர்காட்டில் சிரித்திடும் ஸ்ரீராமனும் சந்த்ரனின் இன்பமாம் வெள்ளிக்கதிர்களில் பளபளத்து மின்னும் கவிதை அழகுணர்ச்சி, பிழிந்திட்ட பண்ணினிமை இவற்றின் எழிலான (ஸத்குருதேவ!) 200

பண், இறையன்பு, உவகை இவற்றின் நறுமணந்தனை நுகர்ந்து இன்புற்றமர்ந்திட்ட, இன்பமளித்துக்காத்திடும், தன்னியற்றகையோனின்[1] மீது உயர்ந்த, சீரிய நற்கீர்த்தனங்களெனும் நறுமலர்களைச் சொரிந்திடும் இன்பமான மிகச்சிறந்த நாததேவதாருவான / பண், இறையன்பு, உவகை இவற்றின் நறுமணந்தனை நுகர்ந்து இன்புற்றமர்ந்திட்ட, தன்னியற்றகையோனை இன்பமான நிழலளித்து, சீருயர் நற்கீர்த்தனங்களெனும் நறுமலர் சொரிந்து மகிழ்ந்திடும் தலை சிறந்த நாத தேவதாருவான (ஸத்குருதேவ!) 201

இத்தனித்த ஶிஷ்யை உள்ளாழ்ந்திட நிழல் தந்து இன்பூட்டும் இன் நறுமணமுடை பாட்டெனும் தேவதாருக்கள் நிறைந்த நாத இமயக்காடான (ஸத்குருதேவ!) 202

உள்ளாழ்ந்திடுநிலையின் மோனம் உயர்ந்தோங்கி ஆட்சிபுரிய, இறைவன் திருநாமங்களின் நல்மணம் கூடிய, இசையெனும் இமய தேவதாரு வனமான (ஸத்குருதேவ!) 203

நாதமெனும் இமயச்சாரலிலே இறைவன் திருநாம நறுமணம் நிறைந்த க்ருதிகளாம் தேவதாருக்கள் அடர்ந்த அழகிய இசைவனமாகிய (ஸத்குருதேவ!) 204

உள்ளப்பனிமலை அமைதிக்கோயிலில் இன்னிசை ஒலிகளின் மணம் நிரப்பும் கீர்த்தனங்களாம் தேவதாரு வனமாகிய (ஸத்குருதேவ!) 205

பாட்டெனும் மணமிக்க தேவதாரு வனங்களடர் மலைச்சரிவுகளுடை, என்றும் புதிய, பலவகைப்பட்ட திவ்யநாமகீர்த்தனங்களெனும் கங்கை பெருகியோடும், ராமானுபவம் என்னும் தெய்வீகப்பனிமலையான (ஸத்குருதேவ!) 206

[1] தன்னியலான இறைவனின்

திவ்யானுபவம் எனும் இமயத்தில், இறையின்பமெனும் கங்கைக்கரையில், க்ருதித் தொகுப்புகளாம் தேவதாருக்களின், ராம, க்ருஷ்ண எனும் நாமமலர்களின் நறுமணமான (ஸத்குருதேவ !) 207

ஸ்ரீராமபக்தி எனும் கங்கைக்கரையிலுள்ள கானவனமான (ஸத்குருதேவ !) 208

ஸ்ரீராமபக்தி எனும் கங்கைக்கரையினிலே கானக்காட்டினிலே ஏழிசை ஒலிகளாம் கிளைகளிலமர்ந்து இன்குரலில் இறைவன் நாமந்தனைக்கூவிடும் நாதப்பறவையான (ஸத்குருதேவ !) 209

ஒளிவீசும், மதிமுகம் படைத்த ஸ்ரீராமன் புகழ்பாடும் இசைப்பறவையான (ஸத்குருதேவ !) 210

ஸ்ரீராமனிடத்து நினது அநுராககானம் (அன்புடை இசை) பெருக்கெடுத்தோடும் கங்கைக்கரையில் நின் பாட்டெனும் கிளைதனிலமர்ந்திட்ட இந்த ஶிஷ்யப்பறவைக்கு தொடர்ந்து நாமஸங்கீர்த்தனம் செய்யுமின்பத்தையும் அழகினிய குரல் வளமும் வளரச்செய்யும் (ஸத்குருதேவ !) 211

ஸ்ரீராமானந்தமெனும் கங்கையில் தாவும், நாமானந்தத்தை உண்டிடும் நாதப்பறவையான, இந்த ஶிஷ்யையாம் அன்புடைப்பறவை உண்டிடும் இனிய பாட்டுக்கொண்ட, திளைந்திடும் அமுதான, பண்ணெனும் கங்கையான (ஸத்குருதேவ !) 212

இசையின்பமெனும் கங்கைக்கரையினிலே, அடர்மோனக்காட்டின் அமைதியிலே, இறைவன் திருநாமங்களைக் கூவின இன்னிசைக்குரலான (ஸத்குருதேவ !) 213

இறையுணர்வாம் நறுமணமிக்க க்ருதிகளெனும் தேவதாருக்காடுகளடர்ந்த, நாதமயமான வாழ்வெனும் இமயமலைச்சாரலிலே, ராமபக்தியெனும் சிகரத்தின் அமைதி முனையில் இனிது பாடும் பறவையான (ஸத்குருதேவ !) 214

அமைதியுடை உள்ளமாம் இமயத்தில் இறைவன் திருநாமத்தை உரைத்தலெனும் உயர் தேவதாருமரத்தில் இறைப்பண்பின் தன்னுணர்வுதனை இனிது பாடும் அழகிய குரல் படைத்த நாதப்பறவையான (ஸத்குருதேவ !) 215

ராகமெனும் இமயக்காட்டினிலே ஸ்ரீராமனின் இன்திருநாமங்களை மிக்க இனிமையாக இன்பத்துடன் கூவிடும் இசைப்பறவையான; ஸ்ரீக்ருஷ்ணனுகவும், ஸூர்யகுலத் தோன்றலாகிய ஸ்ரீராமனுகவும்

அவதரித்தவனின் பற்பலதிருநாமங்களை மெல்லினிமையாகக் கூவிடும், பெருந்திரளாம் க்ருதிகளெனும் இமயச்சரிவினிலே இன்கூவலில் புல்லரித்து நிற்கும் பக்தர்களெனும் தேவதாருக்கூட்டங்களையுடைய (ஸத்குருதேவ !) 216

இறையுணர்வெனும் தங்கமுகட்டினைக் குளிப்பாட்டிடும் மெய்யறிவுப்பகலவனின் கதிர்களால் சூழப்பட்ட, உள்ளாழ்தலெனும் இமயவனத்தில், பரம்பொருளை முழுதுணர்தல் கைகூடும் பேரின்பத்தை மெல்லினிது பாடும், தேன்குரல் படைத்த நாதப்பறவையான (ஸத்குருதேவ !) 217

மெய்யறிவுப்பனிமலையின் இறையன்பெனும் தோப்பினில் இறைவன் நாமந்தனை அளவற்ற அன்புடன் கூவிடும் இசைப்பறவையான (ஸத்குருதேவ !) 218

நாத இமயச்சாரலிலே நாராயணன் நாமந்தனைக் கூவிடும் ஞானப்பறவையான (ஸத்குருதேவ !) 219

நாத கங்கையின் ‘ஓம்’காரஸ்ருதியுடன் அமுத கீதங்களில் நாம இன்பத்தினைப் பரப்பிடும் இன்னொலிப்பறவையான (ஸத்குருதேவ !) 220

நாம கங்கையின் ஸ்ருதி ஒலிக்க ஞானஹிமாலயத்தில் மோனவெளியில் எழும்பிப் பறக்கும் நாதப்பறவையான (ஸத்குருதேவ !) 221

நாதப்பனிச்சிகரத்தில் நாமந்தனைக் கூவிடும் ‘ஓம்’காரப்பறவையான (ஸத்குருதேவ !) 222

இருளடைந்த மனமெனும் இமயக்குகையில் பறந்திடும் நாதஒளிப் புள்ளான (ஸத்குருதேவ !) 223

உள்ளப்பனிக்கோயிலில் நீடமைதிப் பொற்காலையில் மிக இனிய இசைபாடும் பறவையான (ஸத்குருதேவ !) 224

இவ்வுள்ளத்து ஆழமைதியெனும் இமயமலைச்சாரலிலே, சொல்லிசை நடையின் மிக அரிய அழகும் பற்பல திருநாமங்களின் அடர்ந்த நறுமணமும் பொருந்திய தேவதாருக்கூட்டங்களாய் அடர்ந்த எண்ணிறந்த மங்கள க்ருதிகள் கொண்ட (ஸத்குருதேவ !) 225

இசையெனும் அடர்ந்த தேவதாருவனத்தில் ஏழிசை ஒலிகளெனும் பற்பல புள்ளின ஓசைகளின் மெல்லினிமையான (ஸத்குருதேவ !) 226

நாதமாம் இமயமலைச்சரிவினிலே பலவகை அழகொளிர் ஏழிசை ஒலிகளின் இன்மணம் கமழும் கானமாம் தேவதாரு வனமான (ஸத்குருதேவ!) 227

ஸ்ரீராமானுபூதி எனும் ஹிமாலயத்தில் பக்தியாம் கங்கைக்கரையில், பலவகைப்பட்ட, என்றும் புதிய க்ருதிகளெனும் தேவதாரு வனத்தின் திவ்யமணமான (ஸத்குருதேவ!) 228

உள்ளத்தொடுவானில் புலப்படும், ஆழ்ந்த இறையன்பின் நறுமணங்கொண்ட, இறையுணர்வினில் புல்லரித்து நிற்கும் க்ருதிதேவதாருக் கூட்டங்களடர்ந்த, ஒப்பற்ற இசையாம் அடர்மலைத்தொடர்கட்கப்பால் என்றும் பனி படர்ந்த வெள்ளிப்பனிமலை உச்சிகளாய் மின்னும், பரப்ரம்ம நற்காட்சியான (ஸத்குருதேவ!) 229

உள்ள மலைச்சரிவுதனில் ஸ்ரீராமனின் நற்பண்புகளின் அனுபவமென்னும் நறுமணம் பரப்பும், எழில் செறிந்த, என்றும் அழியாத க்ருதிகளாம் தேவதாருக்களின் நடுவே சலசலக்கும்/ இனிதொலிக்கும் நாதமென்காற்றான (ஸத்குருதேவ!) 230

இவ்வுலகியற்பயணத்தின் துன்பங்களாம் வெப்பம், புழுதிச் சூழலைத்தகர்க்கும், இன்னிசையாம் உயர்ந்தோங்கிய பனிமலையின், புத்தம்புதிய மங்களமான இனிய க்ருதிகளாம் தேவதாரு வனத்தில் ஹரிநாமங்களாகிய தண்ணிய, உள்ளிழுக்கும் மூச்சுக்காற்றாகிய (ஸத்குருதேவ!) 231

இவ்வுலகவாழ்வுப்பயணத்தின் அலுப்பினைத் தீர்த்திடும், உட்பொருளழகும் பண்ணினிமையும் நிறைந்த க்ருதிகளின் புத்தம்புது நறுமணமிக்க, உள்ளிழுக்கும் இமயக்காற்றான (ஸத்குருதேவ!) 232

தண்ணமைதியுடை மெய்யறிவாம் இமயத்தில் உள்ளிழுக்கப்பட்ட நீடமைதியெனும் புத்தம்புதிய மூச்சுக்காற்றான (ஸத்குருதேவ!) 233

அடர் அமைதியுடை உள்ளமெனும் இமயப்பள்ளத்தாக்கினுள்வனத்தில் பற்பல சிறப்புடை ஏழிசை ஒலிகளெனும் தேவதாருக்கூட்டங்களை முத்தமிட்டு மிக இனிமையான இசைமழை பொழிமுகிலான (ஸத்குருதேவ!) 234

ஸத்கீர்த்தனங்களெனும் அடர்க்காடுகள் நிறைந்த ஞான இமயத்தொடரில் மிடைந்துள்ள தெள்ளிய தலங்கொண்ட ஆழ் அமைதி ஏரியான (ஸத்குருதேவ!) 235

அலைகளற்று, ஓசையற்ற, தெளிந்த,அமைதியான உள்ள/இவ்வெண்ண ஏரிதனில் உருநிழற்படிவான, இறைவன் திருநாமங்களாம் வெண் முகில்கள் மிதக்கும், ஆழ்ந்தொலிக்கும் இசையின் பல்வண்ணப் பண்ணெழில் மிளிரும், ஞானமெனும் அடர்நீலவானை (ஸத்குருதேவ!) 236

க்ருதிகளெனும் பனிமலைத்தொடரில், ஓங்கியுயர்ந்த மெய்யறிவாம் வெண்பனிமலை பிரதிபலித்திடும் ஈடமைதி ஏரியான (ஸத்குருதேவ!) 237

உள்ளப்பரப்பினின்று/இவ்வெண்ணங்களில் காணப்படும், பண்ணினினிய மணம் அடர்ந்து, மனதுக்கினிதமைந்து, மனதுக்கினிய ஶ்ரீராமானுபவங்களின் தொகுதியான, தேவதாருவனங்கள் நிறைந்த, கணக்கற்ற க்ருதிகளெனும் மலைத்தொடர்கட்கப்பாலுள்ள பேருயர் ஞானமாம் வெள்ளிப்பனிமலை உச்சியான (ஸத்குருதேவ!) 238

கவிகட்குக் கற்பகத்தருவென, ஞானமாம் அடர்நீல வானளாவும் நாதப்பனிமலையின் கற்பனைக்கெட்டா எழிலான (ஸத்குருதேவ!) 239

விலங்குகளேயான மனிதர்களின் உதவியின் தேவையினால் ஏற்படும் துன்பத்திற்கு ஒரே மாற்றுவழியும் புகலிடமுமான (ஸத்குருதேவ!) 240

கடுங்கோபவேளையில் மனதை அமைதிப்படுத்தும், இணையற்ற இயற்கை எழில் காணப்படும், நாதப்பனிமலைக்கோயிலான (ஸத்குருதேவ!) 241

ஞான இமயவனத்தில் தவத்தைத்தடுத்துத் துன்புறுத்தும் இவ்வுலகியல் வருத்தங்கள், அச்சம், திகில் முதலான அரக்கர் கூட்டத்தை அழித்திடும், வாழ்வெனும் யாகத்தைக் காத்திடும், பீமாகாளியுடையவும் [2], பீமாகாளியின் மங்களமான அண்ணனுடையவும் [3] அருள் செய்யும் மங்களமான கீர்த்தனைகள் செய்த ஆசார்யதேவ! 242

ஏழிசை ஒலிகளாம் ஒளிவடிகால்களுடைய, இசையறிவெனும் ஒளிக்கற்றையான ஸத்குருதேவ! 243

இவ்வுலகக்காட்டில் வழிதெரியாது சுற்றித்திரிந்து வெம்மையிற்சோர்ந்து துன்புற்ற உள்ளத்திற்குத் தண்மதிக்கதிரின் இதந்தரும் க்ருதிகளாம் செடிகளில் நாம மலர்களடர் சரிவுகளுடைய ஸங்கீத ஹிமாலயமான (ஸத்குருதேவ!) 244

உள்ளத்து இயற்கையின் எல்லையிலாப்பரப்பினை இசையெனும் தண்ணிய

[2] பீமாகாளி கோயில்

[3] காளியின் அண்ணன் – ஶ்ரீராமன்

பண் வெள்ளிக்கதிர்களால் குளிப்பாட்டி அமைதிசெய்யும் நாத முழுமதியான (ஸத்குருதேவ!) 245

அமைதியுற்ற உள்ளமாம் உள் இமயத்தில் எப்பொழுதும் காணப்படும் ஞானப்பனிச் சிகரமான (ஸத்குருதேவ!) 246

உள்ள அமைதியெனும் உள் இமயத்தொடுவானில் ஓங்கி உயர்ந்து நிற்கும், நிலைத்த ஆத்மானந்தமெனும் பனிமலைத்தொடர்களில் பெறும் கடவுளின் காட்சியான (ஸத்குருதேவ!) 247

வேறு போக்கிடமற்ற இந்த பக்தையின் உள்ளம் நிறை அன்பெனும் அடர்நீலவானினை அளாவி, எப்பொழுதும் காட்சியளிக்கும், என்றும் உறைபனியுடை வெள்ளிச்சிகரமாம் நாதப்ரம்மனுன (ஸத்குருதேவ!) 248

மனமெனும் மோனப்பனிமலையினில் நறுமணமிக்க உயர்ந்தோங்கிய தேவதாருக்களாம் திவ்யமான கவிநயமுடை இவ்வெண்ணங்களின் வித்தான (ஸத்குருதேவ!) 249

புத்துயிரூட்டும்/உட்தூண்டலளிக்கும், நாமமலர்கள் நிறை க்ருதிகளெனும் இமயக் காட்டினை ஊடுருவிப்பரவிய, தண்ணிய இன்பண்காற்றுன; இன்னிசை அருட்கிளர்ச்சியுண்டுபண்ணும் இசையின் உயிரான (ஸத்குருதேவ!) 250

ஸங்கீதத்தின் உயிர்நாடியான உணர்ச்சி, ராகம், தாளம், இன்பம் ஆகிய நான்கு புண்ணியத் தலங்களுடைய நாத 'ஓம்'கார ஶ்ருதியாம் தூய வெண்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 251

ஞான இமயத்தில் மோனவனத்தில் உள்ளாழ்ந்து இறைவன் திருநாமங்களை ஆழ்ந்திசைத்த/ஆழ்ந்திசைக்கச்செய்யும் / மோன வனத்தில் உள்ளாழ்ந்து இறைவன் திருநாமங்களைத் தாளத்துடன் ஆழ்ந்திசைக்கச் செய்யும் ஞான இமயமான (ஸத்குருதேவ!) 252

கட்டுப்பாடும் அமைதியுமான இமயத்தோப்பினில் உள்ளாழ்தலின் இன்பநலமான/ இன்பமுடைய/இன்பமருளும்; இறைவன் திருநாமத்தைப்பாடி பஜனை செய்தலான கங்காஸ்னுனத்தின் இன்பமான/இன்பமுடைய/இன்பமருளும் (ஸத்குருதேவ!) 253

உள்ளாழ்தலாகிய கங்கைநீராடலின்பமும் இறைவன் திவ்யத்திருநாமங்களாம் கங்கைநீர் பருகுமின்பமும் அருளும், நாதகங்கை பாய்ந்தோடும் திவ்ய ஞானகோமுகமான (ஸத்குருதேவ!) 254

ஸங்கீதானந்தம் பெருக்கெடுத்தோடும் அலகாநந்தா, ஸாஹித்யத்தின் மிக்க எழிலாம் மந்தாகினி, லயம் எனும், ஆத்மாவுடன் ஒன்றிடல்

செய்திடும் பாகீரதி, மென்மையான இனிய அன்புணர்வு ததும்பும் எழில் வாய்ந்த க்ருதிகளாம், கீதாசார்யன் கும்மாளமிட்ட யமுனே – இவற்றின் பிறப்பிடமான நான்கு புனிதத்தலங்களின் சிறப்புடைய ஸங்கீத ஹிமாலயமான (ஸத்குருதேவ!) 255

வீட்டுபேறளிக்கும் ஸ்ரீரகுநாயகனின் திருவடி இணேதனே விடாத (விடப்படாத திருவடி இணேதனேயுடய) ஞானமாம் பாகீரதியும் கானமாம் அலகாநந்தாவும் கலந்திடும் ஸங்கீதகங்கையின் புனிதத்தலமான நாததேவப்ரயாகையான (ஸத்குருதேவ!) 256

நாரதரின் இசையில் மகிழ்வோன் [4] நாமத்தில் மகிழ்ந்து த்யானத்தில் ஆழ்ந்திடும் கேதாரநாதன், நாதவடிவான ஶங்கரன் அளித்தஸப்தஸ்வரவித்யா– ஏழிசைக்கலே—எனும் கேதாரத்தல மந்தாகினியும், பதரீநாதனின் பாதத்தில் பக்தி எனும் அலகாநந்தாவும் எழிலுறக்கலந்திடும், ஸங்கீத இன்பம் கூத்தாடும், உள்ளாழ்ந்திடல் செய்யும் ருத்ரப்ரயாகையான (ஸத்குருதேவ!) 257

கர்ணனின் தந்தையான ஸூர்யனின் குலத்திலகமாம் ஸ்ரீராமனேக் கொஞ்சிடும் ராகங்களும், ஆயர்களால் கொஞ்சப்பட்ட கண்ணனேப் புகழ்ந்திடும் பாட்டுக்களுமாகிய பிண்டாரி கங்காவும், இறைவன் திருநாம இன்பமெனும் அலகாநந்தாவும் கலந்திடும் வண்ண எழிலார்ந்த கர்ணப்ரயாகையான (ஸத்குருதேவ!) 258

நந்தனே மகிழ்விப்போனே மகிழ்விக்கும்/மகிழ்விப்போன் மகிழ்ந்திடும் நந்தவனமாம் எழில்வாக்குடை அழகிய க்ருதிகளெனும் நந்தாகினியும் ஞானகம்பீரமாம் அலகாநந்தாவும் கலந்திடும் கானுநந்தமாம் நந்தப்ரயாகையான (ஸத்குருதேவ!) 259

உள்ளந்தூய்மையெனும் வெண்பனிமலேயிலுதித்த, வேதவேதாந்தங்களின் ஸாரமான ஸத்ஸாஹித்யமெனும் தெளளீகங்காவும், ராகஸாரமாம் அலகாநந்தாவும் கலந்த இடைவிடாப் பொழிவாம் கானப்பெருக்கினுல் அபிஷேகிக்கப்பட்ட விஷ்ணுவின் திருப் பாதங்களேயுடைய விஷ்ணுப்ரகாயையான (ஸத்குருதேவ!) 260

இவ்வுலகக்கவலேகளாம் கிணற்றில் மூழ்கிய இந்த பக்தையைக் கைகொடுத்துத் தூக்கி பரப்ரம்மானுபவம் [5] எனும் இமயத்தில் ஏறச் செய்திடும் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்மர் எப்பொழுதும் வஸித்திடும், ஞான ஒளிமயமான அன்புடை மெல்லிதயமே பீடமான [6] (ஸத்குருதேவ!) 261

[4] ஸ்ரீராமன்

[5] கடவுளே உணர்ந்தறிதல்

[6] ஜோஷிமட்

நரநாராயணர்கள் கட்டுப்பாட்டுடன் முனைந்து தவமியற்றிய புனித இடமான பதரீகாஶ்ரமமே ஆன தவக்கோப்புடை மனத்தலமுடைய; தவக்கோப்புடை மனத்தலத்தில் ஒன்றிய நாராயணனை உடைய (ஸத்குருதேவ!) 262

நரநாராயணர்களின் முழுநிறை நெருங்கிய உறவினை வெளிப்படுத்தும் புனிதமான பதரீகாஶ்ரமத்தின் புனிதத்தன்மையுடைய, ஸ்ரீமந்நாராயணனின் நாமகீர்த்தனங்கள் செய்த/புனித பதரீகாஶ்ரமத்தின் புனிதத்தன்மையுடைய, நரநாராயணர்கட்கிடையுள்ள நெருங்கிய உறவினைத்தெரியப்படுத்தும், ஸ்ரீமந் நாராயணனின் நாமகீர்த்தனங்கள் செய்த (ஸத்குருதேவ!) 263

நரநாராயணமலைகளின் பள்ளத்தாக்கிலுள்ள பதரீகாஶ்ரமத்தின் புனிதம் படைத்த உள்ளத்தலத்தில் த்யானமாம் 'ஓம்'கார ஶ்ருதியுடன் கானமாம் அலகாநந்தாவினுல் நீராட்டப்பெற்ற ஸ்ரீமந்நாராயணனின் மங்கள விக்ரஹத்தை அர்ச்சிக்கும் புத்தம்புதிய, வாடாத, மிக்க நறுமணம் கொண்ட, ராகங்களின் வண்ண ஜாலங்கள் பொருந்திய நாமமலர்களுடை க்ருதித்தொகுதிகள் படைத்த (ஸத்குருதேவ!) 264

மனமெனும் கொதிநீர்க்குளத்திற்கு வெகு அருகில் கவிதை எழிலெனும் மிக்க தண்மை படைத்த நாமகீர்த்தனங்கள் எனும் அலகாநந்தாப்ரவாஹமான (ஸத்குருதேவ!) 265

ஸ்ரீமந்நாராயணன் நேரில் காட்சிதரும் புனிதத்தலமான உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும் கீதமாம் அலகாநந்தாப் பெருக்கான (ஸத்குருதேவ!) 266

நாதமாம் ஹிமாலயத்தில் பற்பல ராகங்களாம் பாறைகளில் பலவகைப்பட்ட கீர்த்தனங்களின் சொல்வண்ணத்தில் ஸ்ரீமந்நாராயணனின் மங்கள விக்ரஹத்தைச் செதுக்கிய சிற்பியான (ஸத்குருதேவ!) 267

வியாஸாசாரியாரால் இயற்றப்பட்ட இதிஹாஸத்தின் [7] எல்லா அறிவுரைகளும் பொருந்திய, ஸரஸ்வதியின் அருளளிக்கும், வெற்றி பெறச்செய்யும் நாராயணனின் திருநாமங்களை வணங்கிடும் மிக இனிய நற்கீர்த்தனங்களால் உள்ளகுகையில் ஒளியூட்டிடும் மனித உத்தமராக அவதரித்த ஸத்குருதேவ! 268

இவ்வுலகவாழ்வெனும் குறுகிய மலைப்பாதையில் குறுக்கிடும் இடர்கள், துன்பங்களெனும் கடுஞ்சீற்றமுடை நீர்ப்பெருக்கினைக் கடந்திட உதவும்,

[7] மகாபாரதத்தின் முதல் ஶ்லோகம்

அளவற்ற ஆற்றலுடை இறைவனின் திருநாமங்களைப் பாடிடலாகிய கற்பாலத்தைச்செய்த [8] (ஸத்குருதேவ !) 269

கவிதை எழில் வெள்ளமாய்ப் பொழிந்திடும் சொற்செல்வத்தின் அருவியாய், ஸ்ரீராமசந்த்ரனின் புகழ்பாடல் நிலவின் புன்னகையாய் வெள்ளியெனப் பெருகி எல்லா பக்கங்களிலும் சூழ்ந்துள்ள இறையுணர்வுகளெனும் பனியுச்சிகளினின்று இழிந்தோடிவந்திட, அமுதகானமெனும் அலகாநந்தாவின் இவ்வுலகிற்கப்பாற்பட்ட அழகான (ஸத்குருதேவ !) 270

நாதச்சாற்றின் இனிமைமகிழ்வெனும் பொற்சிகரத்தினின்றிழியும் கீர்த்தனைச்செல்வத்தின் பொழிவான "வஸுதாரா" நீர்வீழ்ச்சியான (ஸத்குருதேவ !) 271

இவ்வுலகவாழ்வெனும் புயற்காற்றில் சுற்றிச்சுழன்று தவிக்கும் இத்தனி ஆத்மாவிற்கு ஒரே பாதுகாப்பான ஞானமெனும் பனிமலைக்குகையான (ஸத்குருதேவ !) 272

நாதப்ரம்மனை நேரில் உணரும் இமயமலை ஏற்றத்தில் மூச்சுத்திணறி இடர்களெனும் பனிப்பொழிவில் துன்புறும், ஒருமுறைப்பாடுகொண்ட இந்த ஶிஷ்யைக்கு முன்னின்று வழிநடத்தும் இளஞ்சூடுகொண்ட கதிரவனான (ஸத்குருதேவ !) 273

இறையுணர்வு எனும் இமயத்திலேறும் துன்பங்களைத் தணித்திடும்; தேனினிய க்ருதிகளெனும் அடர்காடுகளில் உள்ளத்தை அமைதிப்படுத்தும்; உள்ளத்தை உயர்த்திடும், வெகு உயர்ந்த எண்ணங்களாம் வானளாவும் வெண்பனிமலை உச்சியினின்று இழிந்திடும் கானகங்கையின் 'ஓம்'கார ஶ்ருதியில் உள்ளம் உள்ளே ஒன்றிடச்செய்யும் குருவர ! 274

இவ்வுலகவாழ்வெனும் இமயக்காட்டினில் அறியாமை இருளில் மூழ்கித் தத்தளிக்கும் இவ்வுயிரை க்ருதிகளெனும் கைவிளக்கால் வழிநடத்தி மெய்யறிவாம் ஒளிக்கிரணங்கள் சூழ்ந்த நாதப்ரம்மானந்தமெனும் பொன்மலை உச்சியினை அடைவிக்கும் ஸத்குருதேவ ! 275

நீலக்கழுத்துடையோன் இன்புறும் நாம அமிழ்து நிறைந்த கானமுகில்கள் தவழும், நீல மேனியொனில் இன்புற்ற தன்னுள் அனுபவங்கள் அடர்ந்த

[8] 'பீம் புல்' எனும் பீமன் பாலத்தைக்குறிக்கிறது. பதரிநாத்திலிருந்து வஸுதாரா செல்லும் வழியில் கடுஞ்சீற்றத்துடன் பாயும் ஸரஸ்வதியைக் கடக்க பாலம்போலமைந்த மிகப்பெரிய பாறை. பீமனால் அமைக்கப்பட்டது என்று ஐதீகம்.

அடர்நீல வானிலுள்ள, நாதமெனும் கருநீலமுகிலான (ஸத்குருதேவ!) 276

கானமெனும் அடர்நீலவானில் பொன், வெள்ளி மயமாக மின்னும், பகலவனும், தண்மதியும் கண்களாக உடையோன், கருடனை ஊர்தியாகக்கொண்டோன் மீது கொண்ட அன்பும் பண்ணினிமையுமான வெண்முகிலான (ஸத்குருதேவ!) 277

நாதப்பனிமலையில் ஞானவானில் ராகக் கருநீலமுகிற்கூட்டங்களிடையே கவிச்சிறப்பெனும் தங்க, வெள்ளி விளிம்புடைப் பாட்டெனும் வெண்முகிலான (ஸத்குருதேவ!) 278

உள்ளமெனும் இமயத்தில் அறியாமையெனும் கருமுகிற்கூட்டங்களின் நடுவே தனித்து வெள்ளியென ஒளிரும் ஸத்துவ வெண்முகிலான (ஸத்குருதேவ!) 279

மெய்யறிவின்பம் நிறை ஆத்மானுபவமெனும் அடர்நீலவானில் மிதக்கும், நாத இன்பம் செறிந்த அடர்வெண்முகிலான (ஸத்குருதேவ!) 280

தன்னுள் அனுபவங்கள் எனும் கண்கவர் எழில் தோற்றங்களுடை, ராமபக்தியெனும் ஹிமாலயத்தில் மகிழ்வூட்டும் பாட்டுக்களாகிய புஷ்பப்பள்ளத்தாக்காகிய (ஸத்குருதேவ!) 281

இறையுணர்வெனும் நீலவானில், ஆழ்ந்த இசையாம் கருநீல முகில்கள் மிக மெல்லிய உணர்ச்சிகளாம் வெண்முகில்கள், இயல்பான உள்ளறிவாம்—சூழ்ந்துள்ள வெண்பனிச் சிகரங்கள்—இறைவனை நேருணர்தலாம் பொன்னொளி படைத்து வானளாவும் அடர் அறிவெனும் நீலமலைகளிலின்று பேரருவியாய் இழிந்தோடும், லக்ஷ்மணனின் அண்ணன்மீது அன்பும், பண்ணும் ஆகிய கங்கையின் ஸ்வர, ஸாஹித்யங்களாம் நீர் பொன்னென மின்னிட, பற்பல திருநாமங்கள் வைரமாய்ப்பளபளக்க, பல்வேறு பண்களில் அமைந்த க்ருதித்தொகுப்புகளே வண்ணமலர்க்கூட்டங்களாக மலர்ந்து அழகாய்ச்சிரிக்கும் மலர்ப்பள்ளத்தாக்கின் உள்ளங்கவர் எழிலான (ஸத்குருதேவ!) 282

நீலமலைதனைத் தூக்கியோனின் திருமேனியாம் நீலமலைதனில் ஒளிரும் முத்து மாலைகளாகிய வெண்மேகங்களே க்ருதிகளாக, அமுதகங்கையே அழகியதிருநாமங்களைப்பாடும் வைரமாலையாக அமைந்திட்ட எழிலான (ஸத்குருதேவ!) 283

நீல எழிலொளிர் ஸ்ரீராமனை அணிசெய்யும், வெண்மேகங்களின்

ஒளிபொருந்திய முத்து மாலைகளாம், அமுதப்பொழிவாம் ஸத்க்ருதிகள் செய்த (ஸத்குருதேவ !) 284

பண்ணிசையெனும் அடர்நீலமலைமீது ஞானவெண்நுரை ஒளியுடன் தவழ்ந்திடும், இறைவன் திருநாமங்களைப் பாடும் அமுதகங்கையான (ஸத்குருதேவ !) 285

ஜபித்திட்ட தாரகநாமங்களே நூறுகோடி தாராகணங்களாக ஒளிர, அமுதகானமாம் நிலவின் பால்பொழியும் கதிர்களால் முழுக்காட்டப்பட்ட நாதப்பனிமலையினுல் அளாவப்பட்ட, ஶ்ரீமந்நாராயணனை உள்ளுள் உணர்ந்தறியும் மிகமேம்பட்ட இன்பமாம் நீலவானின் அகல்விரிவான (ஸத்குருதேவ !) 286

மரகதமணிவண்ண ஶ்ரீராமனின் துதிகளாம் அழகிய க்ருதிப்பனிமலைமாலையில் பதிக்கப்பட்ட மரகதமணியாம் வண்ணப் பண்ணெழில் ஏரியான (ஸத்குருதேவ !) 287

உள்ளன்பெனும் ஏரியின் தெளிந்த, கண்ணுடிபோன்ற உள்ளத்தில் நாமங்களால் பொன், வெள்ளி மயமாக மின்னும் இத்துதி அலைகளால் அர்ச்சிக்கப்பட்ட, இன்பூட்டும் ராமனிடத்து அன்பெனும் நிறைமதியான (ஸத்குருதேவ !) 288

இன்பமூட்டும் ராமனெனும் நிறைமதியினை வரவேற்கும், மனமாகிய – கண்ணுடி போன்ற (தெளிந்த) தலமுடைய, திவ்யநாமங்களினுல் பொன், வெள்ளியாக மின்னும் இசை அலைகளுடைய, ஞானப்பனிமலையில் நாதமெனும் தங்கமயமான ஏரியான (ஸத்குருதேவ !) 289

ஶ்ரீராமனும் சந்த்ரனின் பனிக்கதிர்களால் வைரமாய் ஒளிரும், பண்ணினிமை, அழகு, பக்தி இவையாகிய வெள்ளிய அலைகள் கொண்ட, உள்ளப்பனிமலையில் பொன்னெளிர் இறையன்பு ஏரியான (ஸத்குருதேவ !) 290

உள்ளப்பனிமலையில் ஞான ஏரியினில் ப்ரதிபலிக்கும் ஸங்கீதத்தின் தங்கமயபிம்பமான ஶ்ரீஸீதாராமசந்த்ரனையுடைய (ஸத்குருதேவ !) 291

ஸத்கீர்த்தனங்களெனும் அடர்காடுகள் நிறைந்த ஞான இமயத்தொடரில் மிடைந்துள்ள தெள்ளிய தலங்கொண்ட ஆழ் அமைதி ஏரியான (ஸத்குருதேவ !) 292

அலைகளற்று, ஓசையற்ற, தெளிந்த, அமைதியான உள்ளப்பனிமலை ஏரிதனில் உருநிழற்படிவான, இறைவன் திருநாமங்களாம் வெண் முகில்கள் மிதக்கும், ஆழ்ந்தொலிக்கும் இசையின் பல்வண்ணப்

பண்ணெழில் மிளிரும், ஞானமெனும் அடர்நீலவானுன (ஸத்குருதேவ !) 293

க்ருதிகளெனும் பனிமலைத்தொடரில், ஓங்கியுயர்ந்த மெய்யறிவாம் வெண்பனிமலை ப்ரதிபலித்திடும் நீடமைதி ஏரியான (ஸத்குருதேவ !) 294

பரம்பொருளை அறிதலெனும் இமயமலை ஏறும் முயற்சியின் களைப்பைத் தணிக்கும், மெய்யறிவெனும் தங்க ஏரியின் அமைதியெனும் பனி நீரான (ஸத்குருதேவ !) 295

உள் ஆழ் தெளிவுற்ற, உள்ளமாம் தங்க ஏரிதனில் உருநிழற்படிவான அமைதிப் பனிமலையின் நாதப் பனி 'ஓம்'காரவடிவான (ஸத்குருதேவ !) 296

புத்தம்புதிய தண்ணிய அமைதிக்காற்றுடைய, அடர்மௌனச் சரிவுதனில் இசை உள்ளுயிர்ப்பு உண்டுபண்ணும் ஆத்மானுபவமாம் பனிமலைத்தொடரில் இறைவனைக் காணச்செய்திடும், இன்கவி எண்ணங்களாம் தூய வெண்பனியில் அபிஷேகிக்கப்பட்ட உயர்ந்தநாதக்கடவுளான [9] (ஸத்குருதேவ !) 297

மூவகைத்துன்பங்களை [10] அழிக்கும், மூவுலகங்கட்கும் அதிபதியான, மூன்று யுகங்களிலுமுள்ள நாராயணன் [11] நாமத்தைப்பாடிய (ஸத்குருதேவ !) 298

ஞானகேதாரத்து வழிகாட்டும் நாமகான மந்தாகினீநாதமான (ஸத்குருதேவ !) 299

ஞானகேதாரத்தில் நாதமந்தாகினிக்கரையில் வீசும் நாமமென்காற்றுன (ஸத்குருதேவ !) 300

ஞானகேதாரநாதனை அர்ச்சித்திடும் நாதமாம் ப்ரம்மகமலத்தின் [12] அழகும், வண்ணமும், பண்ணெனும் இன்மணமுமான; இவ்வன்புடை இதயத்தில் இனிது உறைந்திடும் (ஸத்குருதேவ !) 301

ஞானமாம் கேதாரத்தில் மோனப்பனிமலைச்சரிவினில் பண்பெனும் தண்கதிர்களைப் பொழிந்திடும் இன்பும் அன்புமான அழகிய முழுமதியான (ஸத்குருதேவ !) 302

---

[9] துங்கநாத்

[10] தன்வினை, சூழ்வினை, ஊழ்வினை

[11] கேதார்நாத் போகும் வழியில் உள்ள த்ரியுகிநாராயணன் கோயில்

[12] இமயமலையில் 11,000 அடிஉயரத்தில் காணப்படும், அடர் மணங்கமழும், மஞ்சள் நிறத்தாமரை

மங்களம் செய்யும் ஶிவஶங்கரனின் நாதவடிவான ஹிமாலயத்தில் ஞான உறைபனி வெண்முகட்டினைப் பொன், வெள்ளி அமுதக்கரப்பொழிவால் குளிப்பாட்டிடும், ராமனிடம் அன்பால் அழகுபெறும், பண்ணெனும் நிறைமதிக்கதிரான (ஸத்குருதேவ!) 303

துன்பங்களெனும் பனிப்பொழிவிலும் இடுக்கண்களாம் பனிப்புயற்காற்றிலும் நடுங்கி வழி தவறிச் சுற்றிச்சுழன்று திண்டாடும் இத்தனித்த வலிவற்ற ஶிஷ்யையைக் கரம்பிடித்து நலப்பாதை நடத்திச்செல்லும் ஸத்குருவே! 304

மோக்ஷகங்கையின் மூலமாம் ஞானகோமுகமான (ஸத்குருதேவ!) 305

உள்ளமைதியாம் பனித்தொகுதியிலுள்ள உள்ளாழ்தலெனும் கோமுகமான (ஸத்குருதேவ!) 306

உள்ளாழ்தலெனும் கோமுகத்தினின்று பாய்ந்து வரும் பண்ணிசைகங்கையான (ஸத்குருதேவ!) 307

ஶ்ரீராமனின் மெய்ப்பாதத்யானமாம் கோமுகத்தினின்று பெருக்கிடும் கானகங்கையான (ஸத்குருதேவ!) 308

உள்ளாழ்தலெனும் தூய பனியினின்று பெருக்கெடுத்தோடும் 'ஓம்'கார நாத கங்கையான (ஸத்குருதேவ!) 309

இறையுணர்வெனும் கோமுகத்தினின்று பெருக்கெடுத்தோடும் 'ஓம்'கார நாத கங்கையான (ஸத்குருதேவ!) 310

த்யானமாம் கோமுகத்தின் அமைதியெனும் தண்ணிய இரவின் வியந்தகு எழிலான (ஸத்குருதேவ!) 311

த்யானமாம் கோமுகத்தினின்று பாய்ந்துவரும் 'ஓம்'காரநாதமாம் கங்கையில் ஶ்ரீராமனும் சந்த்ரன் சிரித்திடும் வெள்ளிமயமான இமய இரவின் அமைதியான (ஸத்குருதேவ!) 312

உள்ளாழ்தலெனும் கோமுகத்தினின்று உள்ளொன்றலாம் 'ஓம்'காரஶ்ருதியுடன் பாய்ந்து சிரித்து நடமிடும் நாதகங்கை, ஶ்ரீராமசந்த்ரனின் ஒளிப்புன்னகையில் பளபளக்கும் கவிதை உட்கிளர்ச்சியாம் பனிமலை முகடுகள், இவை விளங்கும் உளமெனும் நாதப் பனிமலைப் பேரமைதியான (ஸத்குருதேவ!) 313

சூழ்ந்துள்ள தெய்வீக அநுபவங்களாம் பனிச்சிகரங்கள் ஶ்ரீராமனும் சந்த்ரனின் மென்புன்னகையில் வியன்தரு மகிழ்வுப் புல்லரிப்பூட்டி வெள்ளியாக மின்னிட, கடைத்தேற்றும் தாரகத்திருநாமங்களாம்

தாராகணங்கள் பளிச்சிட்டு ஒளிர, நாத இன்பமெனும் நீலவானில் நாம இன்பமாம் வெண் மேகங்கள் மிதக்க, த்யான கோமுகத்தினின்று பெருக்கெடுத்தோடி வரும் நாமகீர்த்தனைகளாம் கங்கையின் இன்பந்தரு 'ஓம்'காரஶ்ருதியுடைய மோனஹிமாலயத்தின் இவ்வுலகிற்கப்பாற்பட்ட அற்புத எழிலான (ஸத்குருதேவ!) 314

இறைவனைத்தேடலெனும் தொடர்வானின் அடர்நீலத்தில் பளிச்சிடும், மெய்யறிவுப்பனி நிறைந்து, கானகங்கை பெருக்கிடும், மௌனப்பனிமலைத்தொடராய் அச்சப்பெருமதிப்பூட்டும் (ஸத்குருதேவ!) 315

ஞானத்தபோவனத்தில் நாத அமைதியில் ஒன்றிய (ஸத்குருதேவ!) 316

நாத இமயத்தபோவனத்தில் ஞான அமைதி ஏரியினில் பிரதிபலித்த, பிறவிப்பெருந்துயரினின்று மீட்டுவிக்கும் ஸ்ரீராமதாரகநாம இன்ப அனுபவமாம் ஶிவலிங்க ஶிகரமாகிய (ஸத்குருதேவ!) 317

மனமெனும் தபொவனத்தில் லயமெனும் ஏரியினில் பிரதிபலித்த ஞானவெண்பனிமலையான (ஸத்குருதேவ!) 318

ஸத்துவமெனும் வெண்பனிமலையில் அழகுறும் நாதமெனும் அடர் நீலவானுன (ஸத்குருதேவ!) 319

ஞானநீலவெளியினில் வெண்முத்துமாலையென உளங்கவர் நாதப்பனிமலைத் தொடரான (ஸத்குருதேவ!) 320

தெய்வத்தன்மையெனும் பரந்தகன்ற நீலவெளியில் மாலையாம் அழகிய நாதப் பனிமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 321

தன்னுணர்வு எனும் பனிமலைத்தொடரில் உள்ளாழ்தல் எனும் புலரிப்பேரமைதியில் மெய்யறிவாம் அடர் நீலவானில் பொன்னொளியுடன் மின்னும் ப்ரணவநாதமுகிலான (ஸத்குருதேவ!) 322

சூழ்ந்துள்ள மெய்யறிவுப் பனி போர்த்த நாதமலையினின்று பொன் வெள்ளிமய ஆடையில் மின்னும் பண்ணிசைகங்கை பெருக்கிடும் அகன்ற இமயப் பள்ளத்தாக்கு, கீர்த்தனைகளாம் தேவதாரு, போஜ மரங்களடர் சரிவுகள், இவ்வகற்பரப்பில் ஊடுருவிப்பரந்த ஆழ் அமைதிலயம் – ஆகிய நாத இமயத்தின் தனிப்பட்ட தெய்வீக அனுபவமான (ஸத்குருதேவ!) 323

பேரின்பமெனும் அடர்நீலவானினை அளாவும், மேம்பாடெனும் பனிமுகடுகள் சூழ்ந்த, க்ருதிகளாம் மலைச்சரிவுகளுடை, இறையுணர்வு

எனும் இமயத்தில் களிநடமிட்டு அருவியாக விழும், என்றும் இளமையுடை நாதகங்கையான (ஸத்குருதேவ !) 324

ஆழ் அமைதியில் உள்ளாழ்தலெனும் பனித்தொகுதியினில் தோன்றி, இறையுணர்வறிவெனும் அருவிகளாம் க்ருதித்தொகுதிகளுடன் இணைந்து பெருக்கிடும் நாதகங்கையே ! 325

கானமாம் கங்கோத்தரீ எனும் புனிதத்தலத்தில், நாதகங்கையின் கம்பீரமான– தேவதாருவனத்தின் நறுமணமும் அமைதிலயமுமான / பண்ணெனும் தேவதாருவனத்தில் உறையும் அமைதிலயமுமான– பலவகைக் கீர்த்தனங்களாம் வகைவகையான பாறைகளில் இறைவன் நாமகுணங்களின் சிறப்பெழிலான (ஸத்குருதேவ !) 326

மலைச்சரிவுகளில் அன்பின் பசுமைகொண்ட இவ்வெண்ணக்காடுகள் நிறைந்த, இறைவனைத்தேடலெனும் இமயமலையில் உள்ளாழ்தலாம் இமய ஏரியின் தெளிவினில் உருநிழற்படிவான நாதப்பொன்முகடான (ஸத்குருதேவ !) 327

மெய்யறிவாம் கேதாரகங்கையும் பண்ணிசைலயமெனும் கங்காபாகீரதியும் கலந்திடும் கானமாம் கங்கோத்தரீ எனும் புனிதத்தலத்தின் எழிலான (ஸத்குருதேவ !) 328

ஸ்ரீராமனும் பகலவனின் ஒளிக்கதிரால் பொன், வைர, வெள்ளிமயமாக கீத அலைகள் மின்னும், பண்ணிசை வண்ண எழில் குலுங்கும் நாத ‘ஓம்’காரகங்கையான (ஸத்குருதேவ !) 329

எண்ணவேகத்தைத் தடுத்து நிறுத்திடும், வெகுவேகப் பெருக்கிடும், பலவண்ண பண்ணிசை எழில் கங்கையான (ஸத்குருதேவ !) 330

உள்ளொன்றல் எனும் கௌரீகுண்டத்தில் ‘ஓம்’காரத்தில் ஒன்றிடும் ஓசை இனிமையுடன் பாய்ந்திடும் பண்ணிசைப் பொழிவான (ஸத்குருதேவ !) 331

பண்ணிசை கங்கை பாயும் கௌரீகுண்டத்தில் ஏழு இன்னிசை ஒலிகளின் வியன்தகு வண்ணத் தோற்றங்களில் வானவில் எழிலான (ஸத்குருதேவ !) 332

பொன், வெள்ளி, பசுமை, பசுநீலம், நீலம், இளஞ்சிவப்பு, மஞ்சள் என பல பண்வண்ணங்கள் பளிச்சிடும் நாதகங்கையான (ஸத்குருதேவ !) 333

பண்ணெழில் அலைகள் பளிச்சிடும் ‘ஓம்’கார நாதகங்கையே ! 334

கானகௌரீகுண்டத்தில் ஸத்கீர்த்தனங்களெனும் பாறைகளில் இறைவனின் பலவண்ணப் பண்ணெழில் வடிவங்களை அழகுறச் செதுக்கிய காவ்யகங்கையே! 335

பாட்டெனும் கங்கோத்தரியில் பண்ணெனும் தேவதாருக்காட்டினில் நாத அமைதியின் மோனலயமான (ஸத்குருதேவ!) 336

பண்ணெழில் கங்கோத்தரியில் க்ருதிகளெனும் தேவதாருக்காட்டின் அமைதியெனும் குளிர்ந்த காற்றின் தெய்வீக நறுமணமான (ஸத்குருதேவ!) 337

பண்ணெனும் ருத்ரகங்கை, மெய்யன்பெனும் பாகீரதியின் ஸங்கமம் காட்சியளிக்கும் தெய்வீகமான கீதமாம் பாண்டவாங்கன புண்ய தவத்தலமான (ஸத்குருதேவ!) 338

உலைவுத்திரள்கட்கப்பாற்பட்டு வெகு தொலைவில் தெரியாது வாழும் உள்ளத்தவமெனும் மலை முழைஞ்சினில் தனிமையின் ஒய்வளிக்கும் அமைதியாம் பாண்டவாங்கன முன்னிலையில் இனிய கீதகங்கையே! 339

க்ருதிகளெனும் தேவதாருக்காடுகள் நிறைந்த, இறையுணர்ந்தறிவெனும் ஆழ்ந்த இமயப் பள்ளத்தாக்கினிலே பண்ணெழில் கூத்திடும் ஜான்னவியும் உணர்வுகள் ஒன்றிடும் பாகீரதியும் ஒன்று சேரும் கானகங்கையின்பமே! 340

மெய்யறிவமைதியாம் இமயப்பள்ளத்தாக்கினில் க்ருதிதேவதாருக் கூட்டங்களில் நாதத்தண்காற்று வீச, பண்ணெழில் கங்கையின் தேனிசை உள்ளொன்றிடல் செய்திடும் இமய அமைதியே! 341

உணர்ந்தறிந்தே புரிந்துகொள்ளக்கூடிய, உள்ளூடுருவிப்பரவிய, 'ஓம்'கார நாதகங்கைகூடிய இமய அமைதியே! 342

பக்திப் பனிமலைச் சிகரங்கள் ஞான அடர்நீல வானளாவி நிற்க, திவ்யானுபவ மலைச்சரிவுகளில் புத்தம்புதிய நாமநறுமணமிக்க க்ருதிதேவதாருக்காடுகள் மண்டிக் கிடக்க, பிடிவாதமான தடங்கல்களெனும் பாறைகளைத் தாக்கி உருட்டித் தள்ளிடும் நாதகங்கையின் திவ்யப்ரவாஹம் கொண்ட, ஹரி சிலையாக நின்ற [13], எல்லையற்ற இறையன்பெனும் அழகிய இமயமே ஆன (ஸத்குருதேவ!) 343

பலவண்ண வடிவெழில் படைத்த தனிச்சிறப்பு வாய்ந்த, க்ருதிகளெனும் அழகிய கற்கள் நிறைந்த, மெய்யறிவெனும் அகன்ற மணற்கரை

[13] ஹர்ஸில்

கொண்ட, பண்ணெனும் அழகிய இமயப் பள்ளத்தாக்கினில் பாட்டெனும் கங்கையின் கூத்திடும் அலையே! 344

ஏழு இன்னிசை ஒலிகளெனும் ஏரிகளில் உள்ள/ஏழு இன்னிசை ஒலிகள், பண், தாளம் இவற்றின்—எல்லையற்ற வியன்தகு எழிலான (ஸத்குருதேவ!) 345

ஹரியின் சிலைவடிவினை முழுக்காட்டும் நாதகங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 346

பொழுதுசாய் அமைதியில் ஒன்றிய பண்ணிசைப் பள்ளத்தாக்கின் எழிலே! 347

கழிபேருவகையாம் பொன் முகடுகளால் சூழப்பட்ட அகன்ற பண்ணிசை கங்கைப் பள்ளத்தாக்கின் மிக மேம்பட்ட எழிலான (ஸத்குருதேவ!) 348

ஆழ்ந்த இறையன்பெனும் கங்கைமேல் பண்ணிசைப் பொன்முகிலான (ஸத்குருதேவ!) 349

பாட்டுக்களாம் கங்கையே முத்துமாலையாய்/மலர்மாலையாய்க் கொண்ட அழகிய கருநீலமலை நிகர்மேனியோனாகிய ஸ்ரீராமனின் நாமகீர்த்தனமாம் உத்தரகாஶீ எனும் புனிதத்தலமான (ஸத்குருதேவ!) 350

பரமாத்மாவான ஸ்ரீராமனின் திருவடியாம் பள்ளத்தாக்கில் பண்ணிசை கங்கை இன்னொலியுடன் பெருக்கெடுத்தோட, ஆழ்நீலமலையாம் ஸ்ரீராமனைத்தழுவிடும், இடியொலி முழங்கிடும் கானமழைபொழி அடர்நீல முகிலே! 351

உள்ளாழ்ந்து ஒன்றிடல் எனும் கோமுகத்தில் தோன்றிய, ஞானகானமெனும் பாகீரதியும், அமுதவாக்கெனும் ஸரஸ்வதியுடன் இணைந்த, பகவத் குணானுபவமாகிய மிகப்பல பனிச்சிகரங்களினின்றிழிந்தோடி வரும் க்ருதிவெள்ளமும் சீரிய கவிதை எழிலெனும் தங்கமய உறைபனியினின்றுதித்த திவ்யநாமஸங்கீர்தனமெனும் அலகாநந்தாவும் ஸ்ரீரகுநாதனின் திருப்பாதத்தில் ஒன்று சேரும் தேவப்ரயாகையின் திவ்யகான கங்காப்ரவாஹமான (ஸத்குருதேவ!) 352

மெய்யறிவாம் அலகாநந்தாவும் இறையன்பெனும் பாகீரதியும் ஒருமிக்கும் பண்ணிசைகங்கையின் பொன்வண்ண எழிலான (ஸத்குருதேவ!) 353

தெள்ளத்தெளிந்த அமைதியான கண்ணாடி போன்ற தலப்பரப்பில் காணப்படும் வேத உபநிஷத் மொழியான க்ருதிகளாம் பற்பல மரங்கள்

நிறை மலைச்சரிவுகளுடை இமய எழில் சூழ்ந்த, மெய்யறிவும் இறையன்பும் கூடின இன்னிசைகங்கையின் ஆழ்ந்த திவ்யானுபவமான (ஸத்குருதேவ !) 354

மரகதமணியின் ஒளியுடை ஸ்ரீராமனிடத்து அன்பெனும் பண்கங்கையின் மணற்கரையில், தனிமை அமைதியின் ஓய்வின்பமான (ஸத்குருதேவ !) 355

பண் பலவற்றில் அமைந்த க்ருதிகளாம் பலவண்ண மலைத்தொடர் சூழ்ந்த நாத இமயப்பள்ளத்தாக்கில் நாமகங்கைப் பெருக்கான (ஸத்குருதேவ !) 356

மறைமுதற்பொருளாம் ஹ்ருஷீகேஶனைப் பாடிய க்ருதிவெள்ளம் கரைபுரண்டோடும் கங்கையான (ஸத்குருதேவ !) 357

விடியுமுன்பும் சாயும்பொழுதிலும் அமைதியினில் நீராடி த்யானிக்கப்பட்ட, இன்பமான நாதகங்கையே ! 358

ஒருமுனைப்பட்ட பக்தியெனும் உள் இமயத்தில், தெளிந்த உள்ளமெனும் விடியற்காலை அமைதியில், எல்லையில்லா அழகுடை, க்ருதித்தொகுதிகளும் அவற்றிலுள்ள திருநாமங்களும் தாராகணங்களாகவும் தனி நக்ஷத்ரங்களாகவும் மின்னிட, ஹ்ருஷீகேஶனின் அன்பெனும் தண்மதியும் ஈஶ்வரானுபவம் எனும் எல்லையில்லா நீலவானில் புன்னகைக்க, ஞான வைராக்யங்களெனும் மலைகளால் சூழப்பட்ட பண்ணினிமையெனும் கங்கையின் தூய தெளிந்த குளிர்ச்சிமிக்க நீரில் விடியுமுன் நீராடிய, இத்தனிபக்தையின் ஆத்மலயமெனும் உள்ளப்பனிமுழைஞ்சினின்று இழிந்தோடிவரும் பண்ணெனும் கங்கைக்கரையில் அசையாமனமெனும் பாறைமீதமர்ந்து மிக மெல்லிய நுண்ணுணர்வுகளாம் எண்ணங்களெனும் பறவை ஒலிகளே மெல்லினிய மேற்பாலையாக (மேல் ஸ்வரங்கள்) உடைய, உள்ளாழ்தலாம் கங்கையின் ‘ஓம்’காரஶ்ருதியாகிய தம்புராவுடன் கூடிய ஸங்கீதத்தினுல் ஆராதிக்கப்பட்ட, என் உயிர்நிலையும் உள்ளுயிர்ப்புமான குருதேவ ! 359

மெய்யறிவுப் பகலவனின் க்ரஹணப்பொழுதிலே மூவினைகளின் நிழற்றுன்பம்[14] விட்டகலும் பொருட்டு மும்முறை நீராடி த்யானிக்கப்பட்ட நாதகங்கையே ! 360

மூவினைத் துன்பங்களின் நிழலாம் மாயையினுல் மறைக்கப்பட்ட மெய்யறிவுப்பகலவனின் காட்சி அருளும், உள்ளாழ்தலெனும்

[14] தன்வினை, சூழ்வினை, ஊழ்வினை எனும் மூவினைகளின் நிழல் மெய்யறிவுப் பகலவனின் மீது பட்டு மறைப்பதாலேற்படும் துன்பம்

கங்கைக்கரையான (ஸத்குருதேவ!) 361

உயர்பொருளாம் இறைவனை உணரும் வழியில் தடைசெய்யும் இடையூறுகளாம் பற்பல பாறைகட்கப்பால் 'ஓம்'காரஸ்ருதியுடன் ஓடும் நாதகங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 362

உயர்பொருளாம் இறைவனை உணரும் வழியில் தடைசெய்யும் இடையூறுகளாம் பாறைகளைத் தாண்டும் துன்பத்தைப் போக்கிடும், தண்ணிய இன்பம் பயக்கும், இறைவன் திருநாமங்கள் விரைந்தோடும் க்ருதிகங்கைப்பெருக்கான (ஸத்குருதேவ!) 363

பரம்பொருளை அடையும் வழியில் தடங்கல்களாம் பாறைகளில் பட்ட அடியினை ஆற்றிடும், இறைவன் திருநாமங்களின் தண்ணின்பம் நல்கிடும், திவ்யமான கீர்த்தனைகளின் கங்கைநீரோட்டமான (ஸத்குருதேவ!) 364

வாழ்வுச்செலவில் பண்ணெனும் கங்கையில் நீராடும் வழியில் மூவகைத் துன்பங்களெனும் பாறைகளால் அடிபட்ட காலுடன் தட்டுத்தடுமாறி நடக்கும் இத்தனித்த ஶிஷ்யைக்குக் கைகொடுத்துத் தாங்கும் ஒரே பிடிப்பான (ஸத்குருதேவ!) 365

உலகியற்பொருட்கள்மேல் தாகத்தை மங்கச்செய்து அழிக்கும், அழியா அமுத கீதகங்கையே! 366

(நிந்தன் பொருட்டு) தணியா தாகத்தை உண்டாக்கும், குறையா அமுத கானகங்கையே! 367

மீண்டும் மீண்டும் புகழப்பெற்ற, நீராடப்பெற்ற புனிதமான கீதகங்கைப் பெருக்கான (ஸத்குருதேவ!) 368

பலவகைப் பண்ணிசை வண்ணங்கள் விளங்கும் நாதகங்கையே! 369

இமயத்து மோன அமைதியெனும் தொடுவானில் ப்ரணவ நாதத்தின் பொன்னொளியான (ஸத்குருதேவ!) 370

நிந்தன் நீர்ப்பெருக்கின் நடுவே (க்ருதிகளெனும்) பாறையிலமர்ந்து பாடி மகிழும் இச்சிறு பறவைக்கு மகிழ்வூட்டும் நாதகங்கையே! 371

ஸத்கங்கைக்கரையில் ஒலித்திடும் திவ்யநாமஸத்கீர்த்தனங்களைச் செய்த (ஸத்குருதேவ!) 372

புனிதமான கங்கைக்கரையில் பாடப்பட்ட புனிதமான அமிழ்தெனும் கீர்த்தனங்கள் செய்த (ஸத்குருதேவ!) 373

தேனினிய கங்கையின் ஶ்ருதி கலந்த தேனினிய பாடல்கள்செய்த (ஸத்குருதேவ !) 374

மனமெனும் கங்கைக்கரையில் பாட்டின் ஶ்ருதியான ‘ஓம்’காரமே ! 375

நிந்தன் பண்கங்கையில் நீராடிய இந்த பக்தையின் அன்பெனும் கங்கையில் நீராட்டப்பெற்றோய் ! 376

நிந்தன் கானகங்கையில் நீராடிய இந்த பக்தையின் கண்முன் தோன்றும் ஞானகங்கையே ! 377

இப்பக்தையால் மிகவும் ஏங்கி விரும்பப்பட்ட, உள்ளுயிர்ப்பான உயிர்கங்கையே ! 378

தமோகுண இருள் பரவிய உள்ள ஆழத்தில் கானப்பொன்னொளியான (ஸத்குருதேவ !) 379

இவ்வுலகவாழ்வின் துன்பங்களால் அலுத்த இவ்வுள்ளத்திற்கு அமைதியான கானகங்கையில் மாலையின் ஞானப்பொன்னொளியான (ஸத்குருதேவ !) 380

அழகிய பண்கங்கைக்கரையிலே உள்ளன்புடன் கூடிய பண்ணினிய பாட்டின் பொன்னொளியால் மாலையில் தீபாராதனம் செய்யப்பட்ட (ஸத்குருதேவ !) 381

ஆழ்ந்த உணர்வெனும் கங்கை கீழே அடர்ந்தொலித்து, நாதஹிமாலயத்தில் கானமெனும் அடர்நீல வானில் ஞான ஒளிக்கற்றையால் வெள்ளியாக மின்னும் க்ருதிகளாம் வெண்கொண்டல்கள் கொண்ட, இன்பண் இறைவா ! 382

உள்ளமெனும் கங்கைக்கரையினிலே மெய்யறிவமைதியெனும் மாலை வானில் செம்பொன்னொளிர் நாதக்கொண்டலான (ஸத்குருதேவ !) 383

தீவினையை அழித்திடும், தன்னை அடைந்தவர்களை நன்கு காத்திடும், மெய்யறிவுப்பனிமலை உச்சியினின்றிழிந்த, இறைவன் திருநாமங்களைப் பாடிடல் என்னும் கங்கையான, ஹரியை அடைந்திட வாயிலான [15] (ஸத்குருதேவ !) 384

இவ்வுலகமக்களின் தீவினைகளைத் துடைத்திடவும், ஹரிபக்தியெனும் ஹிமாலயத்திற்கு வாயில் திறப்பாகவும் விண்ணினின்றிறங்கி மண்ணிற்பாய்ந்தோடும், தூய இறைவன் திருநாமங்களை இசைத்திடும் கங்கையான, ஹரியை அடைந்திட வழியான (ஸத்குருதேவ !) 385

[15] ஹரித்வார்

இவ்வுலகப்பயணத்தின் வெப்பத்தால் உளம் துன்புற்றவரை வரவேற்று ஹரிபக்தியெனும் கங்கையில் நீராட ஈர்த்து மெய்யறிவெனும் இமயத்திற்கு வழிகாட்டும் திவ்யநாம கானகங்கை பெருக்கிடும் ஹரித்வாரமான (ஸத்குருதேவ!) 386

குறையா அருட்கிளர்ச்சிப்பொழிவைத் தூண்டும், என்றும் குறையாத, கெடாத அமுத கீத கங்கையே! 387

கண்டவுடனேயே இதயத்தில் இன்ப அலைகளை எழுப்பிடும், பண்ணிசைப் பல்வண்ணம் நடமிடும், புல்லரிப்புண்டுபண்ணும் நாதகங்கையே! 388

ஆழ்ந்தவுடன் அலுப்பினைப் போக்கிடும், ஹரிநாமஸ்மரணமாகிய இன்ப அலைகள் தண்ணிய இதமுடன் தாலாட்டி உடலையும் உள்ளத்தையும் புத்துணர்ச்சி பெறச்செய்து மகிழ்வூட்டும், 'ஓம்'காரஶ்ருதியுடன் நாதவெள்ளம் விரைவுப்பெருக்கிடும், ஞானகங்கையே! 389

ஏழு இன்னிசை ஒலிகளாம் விளக்குகளின் ஒளியினைப் பிரதிபலிக்கும், பொன்னிறத்தில் மின்னிடும் நாதகங்கையே! 390

சொற்களின் பொன்னெழில் நடமிடும் அழகிய க்ருதிகங்கையே! 391

உள்ளாழ்தலெனும் சாயும் பொழுதினிலே பாட்டெனும் விளக்கொளியினில் பொன்னொளிர் பண்கங்கையின் செவ்விய எழிலே! 392

அன்பொளியால் தீபாராதனை செய்யப்பட்ட கானகங்கையே! 393

கானஒளியால் தீபாராதனை செய்யப்பட்ட ஞானகங்கையே! 394

ஞானதீப ஒளியால் நாதத்தை வேண்டும் இவ்விதயம் வியாபிக்கப்பட்டுள்ள, நாதகங்கையே! 395

நாதப்பனிமலையினின்று நாம அமுதுடன் பாய்ந்துவரும் பண்கங்கையே! 396

அமைதியான உள்ளமெனும்/இவ்வெண்ணங்களெனும் பனிக்கோயிலில் பண்ணும் லயமும் பொருந்திய பாட்டினால் தீபாராதனை செய்யப்பட்ட திவ்யகங்கையே! 397

கங்கை உண்டுபண்ணும் லயமும், யமுனையின் அழகும், கேதாரத்தில் உணரப்படும் மெய்யறிவும், நரநாராயணர்கள் உள்ளாழ்ந்திருக்கும் பதரீ எனும் புனிதத்தலத்தின் அமைதியும் ஆகிய நான்கு புனிதத்தலங்கள் கொண்ட நாதஹிமாலயமான (ஸத்குருதேவ!) 398

வானரஶ்ரேஷ்டராகிய ஹனுமானால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுவிடம் பூண்ட பக்தியாகிய பனிச்சிகரத்தினின்று தோன்றிய [16] ஸ்ரீமத்பாகவதக் கதையின் ஸாராம்ஶத்தை ஆழ்ந்துணர்தலால் அமிழ்தினிய க்ருதிகளெனும் யமுனை நீரோட்டமான (ஸத்குருதேவ !) 399

கட்டுக்கோப்பு, கமகம், ஒய்வமைதி, எதுகை, மோனை முதலிய அணிகளும் பண்ணும், லயமும் பொருந்திய எல்லா இலக்கணங்களும் உள்ள ஸாஹித்யமுடைய க்ருதிகளின் நடையாம் எழில் யமுனையின் அடர் நீலவண்ண நீரோட்டத்தினில் பிரதிபலிக்கும் யமுனாபதியாம் அடர்நீலவண்ண ஸ்ரீக்ருஷ்ணனின் புன்னகை விளங்கும் (ஸத்குருதேவ !) 400

இயற்கையின் எழிலிலும் பற்பல இன்னொலிகளிலும் அருட்கிளர்ச்சியின் விதிர்ப்புயிர்க்கும் நுண்ணிய இக்கவி இதயத்திற்கு இன்பமூட்டும் க்ருதிமலர்களின் பொழிவில் யமுனைக்கரையில் விளையாடிக்களித்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பூஜித்த (ஸத்குருதேவ !) 401

ஸகுணத்யானம், நிர்குணஞானம், ஆத்மலயம் ஆகிய மூன்று பனிச்சிகரங்களினின்று உற்பத்தியான ஸங்கீதகங்கா, ஸாஹித்யஸரஸ்வதி, லயயமுனா இவற்றின் த்ரிவேணிஸங்கமமான திவ்யநாம கீர்த்தனங்களின் ப்ரயாகையான (ஸத்குருதேவ !) 402

கண்டாலே வீடளிக்கும் புனிதகங்கை, ஸ்ரீக்ருஷ்ணன் ஆடிக்களித்த யமுனை, சொல்லிசை மங்களமருளும் ஸரஸ்வதி–ஆகிய முக்கூடலில் நீராடும் பலனளிக்கும், உணர்ச்சி, பண், தாளம் இவற்றின் முக்கூடலாகிய திவ்யநாம ஸத்கீர்த்தனப் ப்ரயாகையே ! 403

கண்டாலே வீடளிக்கும் தூய திருவடிகளுடையோய் ! இறைவன் தூய திருவடி பக்தியிற் பெருக்கெடுத்தோடும், தூய நாமகானமெனும் அமுதகங்கையே ! 404

தூய நின் திருவடிகளினின்று பெருக்கெடுத்தோடும் இத்தூய நாமகான கங்கையே ஆனாய் ! 405

ஶிவனால் மொழியப்பட்ட, இப்பிறவிக்கடலை கடந்திடச்செய்யும் ஸ்ரீராம தாரக மந்த்ரம் பெருக்கெடுத்தோடும் கீத காஶீ க்ஷேத்ரமான (ஸத்குருதேவ !) 406

ஸ்ரீராமக்ருஷ்ணரால்/ ஸ்ரீராமனாலும் க்ருஷ்ணனாலும் துதிக்கப்பட்ட, மேலான இன்பத்தில் ஒன்றிடச்செய்யும், காளீதேவியே ஆன

[16] பந்தர்பூஞ்ச் பனித்தொகுதி

புண்யகங்கையாகப் பெருக்கெடுத்தோடும் திவ்ய நாம பஜனை கானத்தின் புனித இருப்பிடமான (ஸத்குருதேவ!) 407

இந்த ஜீவாத்மாவாகிய கங்கையைத் தன்மயமாக்கிக்கொள்ளும் பேரின்பப் பெருங்கடலே! 408

இவ்வனுராகக் கங்கையைத் தன்மயமாக்கிக்கொள்ளும் மெய்யறிவின்பக்கடலே! 409

இவ்வன்பு கங்கையைத் தன்மயமாக்கிக்கொள்ளும் பண்கடலே! 410

உள்ளப்பனிமலையினின்றுதித்த இத்துதிகங்கையைத் தன்மயமாக்கிக்கொள்ளும் பண்ணின்பப்பெருங்கடலே! 411

கவிதை எழில் அலைகளுடன் கரைபுரண்டோடிவரும் இவ்வன்புப்பண்கங்கையை வலிய எதிர்கொண்டழைத்துத் தன்மயமாக்கிக்கொள்ளும் இசைப்பெருங்கடலே! 412

பலவண்ணப் பண்கங்கையின் ஆழ்நீலப் புகலிடமாம் – வெள்ளி அலைக் கரங்களால் பற்றி மகிழ்ந்து வரவேற்கும் பேரின்பக்கடலே! 413

மெய்யறிவு வெளியினின்றிழிந்த நாதகங்கை சேர்கடலே! 414

ஜீவ, ப்ரஹ்ம வேறுபட்ட நிலை, ஒன்றுபட்ட நிலை இவற்றை விளக்கிக்காட்டும் இமயகங்கை, கங்காஸாகரம் இவற்றில் நுட்பமாய் விரிந்துபரந்துள்ளோய்! 415

இவ்வண்ண எண்ணமலர்களிலுள்ள அன்பெனும்/அன்புள்ள மனதுடை இப்புஷ்பாவின் இனிய அன்பெனும் தேன்கங்கை கலந்திடும் கடலே! 416

வண்ணமய இவ்வெண்ணமலர்களிலுள்ள அநுராகமெனும் தேன்கங்கை கலக்கும் / பக்திமிகு உள்ளமுடைய இப்புஷ்பாவின் அன்பெனும் இவ்வினிய கங்கை கலக்கும் இன்பண் கடலினைப் பொன்னெழில் மயமாக்கி உதிக்கும் தங்கக் கதிரவனே! 417

இமயமலை, கங்கை, கடல் இவற்றின் எழிலில் உருகிய இவ்வுள்ளத்தில் கவிதை உட்கிளர்ச்சியுண்டுபண்ணும், வண்ணமயமான மாலை வானில் பொன்னிற ஆதவனே! 418

ஸம்ஸாரக்கடலிற்குமேல் அறிவின்மையாம் கொண்டல்களால் மறைக்கப்பட்ட ஞானப்பனிமலைக் கொடுமுடியைத் தங்கமென

ஒளிவிடச்செய்யும் மெய்யறிவெனும் அருணோதயமான[17] (ஸத்குருதேவ!) 419

இந்த பக்தையின் உள்ளன்பெனும் கடலின் தொடுவானத்தில் கொண்டல்களாம் எண்ணக்கூட்டங்களெனும் பனிமலைத்தொடரின் பொன் முகடுகள் பளபளக்கச்செய்யும் மெய்யறிவாம் காலைக் கதிரவனே! 420

உள்ளக்கடலில் ஒளிவீசும் எண்ண அலைகளில் பிரதிபலிக்கும் ஆத்மானுபவமெனும் செம்பொன் வண்ணத் தொடுவானினை ஒளிரச்செய்யும், நாதமாம் ஓங்கி உயர்ந்த பனிமலைக் கொடுமுடியின் மேல் ஸ்ரீராமசந்த்ரனும் உதயஸூர்யனின் ஞானப்பொற்கரமே! 421

நாதப்பனிமலையின் நாமகங்கா சேரும் ஞானக்கடலே! 422

ஞான இமயம், நாதகங்கா, பேரின்பக்கடல் எல்லாம் ஆனோய்! 423

ஞான அடர்நீலவெளியில் எழில்சேர மிதக்கும் வெண்பஞ்சு மஞ்சுக்கூட்டங்களாம் க்ருதிகள்; முகில்நிகர் கருநீல வண்ணனான ராமனும் பரமாத்மாவை உள்ளில் உணரும் மனப்பக்குவம்; கருநீல வண்ணப்பண் கொண்டல்கள்; நாதமாம் நீல வானினை அளாவும், நாமமாம் வெள்ளி முகடிட்ட கானப்பனிமலைத்தொடர்கள்; ஸ்ரீராமஸாகரத்தில் ஸங்கீத அலைகளுடன் முட்டிமோதிக்கலக்கும், ஞான இமயத்தில் தோன்றிய அநுராக கங்கையின் அழகு; ப்ரபஞ்ச அமைதியினையும் காலை மாலை வேளைகளின் இனிமையையும் கூட்டிடும் ஸப்தஜாலங்கள் புரியும் பறவைகளின் இன்னொலிதனை விஞ்சும் குரல்; தமோ இருளை விலக்கிடும் ஞானக்கதிரவன்; அழகுணர்வும் கவிதைக்கிளர்ச்சியும் உண்டுபண்ணும் தண்மதிக்கதிர்; அலுப்பினை நீக்கிப் புத்துணர்வூட்டி அமைதி இதந்தரும் தூய தண்ணிய இமயக்காற்று – இவை எல்லாமே ஆன எந்தன் இன்னுயிர் குருதேவ! 424

இமயமலை, கங்கை, கங்காஸாகரம் இவற்றின் முழுமையான இயற்கை எழிலில் (லயித்த) தனித்த இந்த பக்தையினது இறைமை உணர்வுத் தொகுதிகள் அர்ப்பிக்கப்பட்ட திவ்ய திருப்பாதங்களையுடைய (ஸத்குருதேவ!) 425

தனித்த இந்த பக்தையின் அநுராகமெனும் கங்காஸாகர ஜலத்தினால் அபிஷேகிக்கப்பட்ட, பூஜிக்கப்படவேண்டிய மங்களமான திருவடிகளையுடைய (ஸத்குருதேவ!) 426

---

[17] கடலின் தொடுவானில் காலைக்கதிரவன் தோன்றுங்கால் கொண்டல்கள் தங்கமயமாய் மின்னி தங்கக்கொடுமுடி இமயத்தை நினைவூட்டும் காட்சி

உள்ளாழ்தலின் அமைதி, இறைவன் திருநாமங்களை இசைத்தல் ஆகிய இவ்விரு நிலப்பரப்புகள் சேர்ந்தெழும்பி இவ்வுலகவாழ்வுத் துன்பங்களெனும் கடல் வற்றி ஓங்கி உயர்ந்தெழுந்த மெய்யறிவெனும் இமயமலைத்தொடரான (ஸத்குருதேவ!) 427

உள்ள உறுதியில் மெய்யறிவாம் உயர்ப்பனிமலையினை அளாவும் (ஸத்குருதேவ!) 428

ஸங்கீத ஶாஸ்த்ரம், ஸம்ஸ்க்ருதம், இவற்றின் ஆழ்புலமையில் அகற்பரப்புடை இமயமே ஆன (ஸத்குருதேவ!) 429

இமயமலைப்பரப்பு முழுதும் எதிரொலித்த திவ்யமான அமுதக்கீர்த்தனைகளே ஆன (ஸத்குருதேவ!) 430

இன்னிசைப் பனிக்கோயிலில் விளங்கும் இன்னெழில் தேவதையைப் பூஜிக்கும் இன்ப மலர் நறுமணமுடைய, பற்பல ராகங்களாம் எழில் வண்ணங்கள் படைத்த, கீர்த்தனங்கள் செய்த/ இங்கு பாடப்பட்ட பனிக்கோயிலில் உறையும் இன்னெழில் தேவதையைப் பூஜிக்கும் இந்த பக்தைக்கு இன்பம் தரும், பற்பல ராகங்களிலமைந்த எழிற்கீர்த்தனங்கள் படைத்த (ஸத்குருதேவ!) 431

ஞான வானினை அளாவிடும் உள்ளத்து இமய அடர் அமைதிதனில் பூஜிக்கப்பட்ட/பேரொலியுடை நாதகங்கையை த்யானித்தலால் நேரிடையாக உணரப்படும் நாதப்ரம்மானந்த! 432

இவ்வுள்ளத்தலத்தினின்று புலப்படும் மோன மாலை வானில், பல வண்ணமுடை இறையுணர்வு எனும் அடர்நீல வானினைத்தொடும் ஞானமாம் பொன்னொளிர் பனிச்சிகரங்கள், கவிதையுணர்வெனும் தங்கக்கரைகொண்ட, கணீர் எனும் இசைமழையைக் கொண்ட பக்தியுணர்வெனும் கருநீலக்கொண்டற்கூட்டங்கள், அடுக்கடுக்கான மலைத்தொடர்களாம் க்ருதிகள், க்ருதிகளாம் மலைத்தொடர்களின் குறுக்கே பண்ணெனும் கங்கையின் பேரொலி – இவை கொண்ட, நீடமைதியெனும் இனிய தண்காற்றுப் பரவிய, நாதப்பனிமலைத்தொடரின் மொத்த அகல் பரப்புக்காட்சியான (ஸத்குருதேவ!) 433

பனிமலைகள்மீது புன்னகைத்திடும் பனிக்கதிர்மதி, அசைவற்ற அமைதிவாய்ந்த, கண்ணாடிபோல் பளபளக்கும் ஏரிதனில் பிரதிபலிக்கும் வெள்ளி ஆடை உடுத்த தங்கமுகடுகள், நீடமைதியும் பேரழகும் வாய்ந்த, பலவண்ணமலர்கள் குலுங்கும் மலர்ப்பள்ளத்தாக்குகள், அடர்நீலநிற வானம், எண்ணிக்கைக்கடங்காத விண்மீன்கள், புத்தம்புதிய இன்தண்காற்று, மலைத்தொடர்களின்மீது மிதக்கும் கருநீல,

வெள்ளைநிற முகில்கள், அடர்ந்த தேவதாருக் காடுகள், நீலமலைகளை அணிசெயும் பலமுத்துமாலைகளாம் அருவிகள், உறைபனியிலுதித்து இமயப்பள்ளத்தாக்குகளில் ஓடும் அமுதகங்கை – இவை கொண்ட பனிக்கோயிலாம் இமயத்தின் ஒப்பற்ற எழில், இன்பம் இவற்றின் முழுநிறைவாம் பேரின்பமே ஆன ஸத்குருதேவ! 434

எண்ணற்ற அனுபவங்களாம் மலைத்தொடர்கட்கப்பால் மோனத்தொடர் நீலவெளியின் அமைதித்தொடுவானில் இவ்வுலகிற்கப்பாற்பட்ட தூய வெள்ளிப்பனிமலைத்தொடரில் நேரில் உணரப்பட்ட பரப்ரம்மத்தின் காட்சியான (ஸத்குருதேவ!) 435

எல்லையற்ற இயற்கை எழில் முழுமையாய் ஆட்சிபுரியும் இமயத்தின் அமைதியிலும் தூயகங்கையிலும் வெண்ணிற அருவிகளிலும் பற்பல இன்னொலிலயத்திலும் (நான்) கண்டுணரும் ஒரே இறைவா! 436

செம்மை, செம்மஞ்சள், தங்கம், வெள்ளியென மின்னும் இமயத்தின் வெண்பனிச்சிகரங்களில் ஒளிரும் பரஞ்ஜோதிமயமான, தொடர்பேரின்பவடிவான (ஸத்குருதேவ!) 437

அன்பில் மலர்ந்த இவ்வழகிய எண்ண மலர்ச்சரிவுகளை எதிர்நோக்கிடும் நாதப்பனிமலைத்தொடரே! 438

மனமெனும் மோனப்பனிக்கோயிலில் எழிற்புன்னகைக்கும், பக்தியில் மலர்ந்த இவ்வெண்ணமலர்ச்சரிவினிலே த்யானகங்கையின் 'ஓம்'காரஶ்ருதியுடன் பாடப்பட்ட நாததேவ! 439

நாதத்தின்மீது அன்புப்பற்றுதல்கொண்ட இவ்வுள்ளமெனும் கங்கைக் கரையினிலே இப்பற்பல நாமங்களெனும் மலர்ப்பொழிவில் பூஜித்து அணி செய்யப்பட்ட நாதமெனும் ஓங்கி உயர்ந்த இமயமான (ஸத்குருதேவ!) 440

நாதப்ரம்மானந்தமெனும் எல்லையில்லா நீல வானளாவும் பண்ணிசைப் பனியுச்சிகள், மெய்யறிவுத்திருமேனியாம் மலைகளில் பெருக்கெடுத்தோடும் பாட்டெனும் கங்கைதனில் நீராடிய பக்தர்குழாம் பணிந்திட்ட திருவடிகளாம் அடிவாரம் இவை கொண்ட நாதஹிமாலயமாம் தனது விஶ்வரூபதர்ஶனமே ப்ரஸாதமான/ப்ரஸாதமாக அளிக்கும் (ஸத்குருதேவ!) 441

நாதமாம் கைலாஸ மலையேறும் வழிக்களைப்பிற்கு இளைப்பாறும் 'நாராயண' [18] எனும் நாமத்தின் ஓய்வுடையோய்! 442

[18] கைலாஸ மலை போகும் வழியிலுள்ள நாராயண ஆஶ்ரமம்

நாதமாம் கைலாஸ மலேயேறும் வழியில் த்யானமெனும் ‘ஓம்’கார மலேயான [19] (ஸத்குருதேவ!) 443

இவ்வெண்ணங்களாம் கைலாஸ மலே உச்சியிலே நிலேத்த வெண்பனியாம் ஞானமயமான, நாத ‘ஓம்’கார வடிவான, ஸதாஶிவ, த்யாகராஜஸ்வாமின்! 444

த்யானமெனும் மானஸ ஏரியினில் பிரதிபிம்பமான நாத கைலாஸத்தின் ஞானப்பனிச்சிகரமே! 445

நாதமாம் நீலவானளாவும் ஞான வெண்பனிக் கைலாஸ சிகரம் பிரதிபலிக்கும், இறையன்பு, பண்ணிசை இவற்றின் வண்ண எழிலுடை மானஸ ஏரியே! 446

நாதப்ரம்மமும் தூய வெண்பனிமலேப் பிம்பம் காணும், மெய்யறிவெனும் உள்ள ஏரியான (ஸத்குருதேவ!) 447

அமைதியான உள்ள ஏரியினில் பிரதிபலித்திட்ட நாதப்ரம்மனெனும் தூய வெண்பனிக் கோயிலான (ஸத்குருதேவ!) 448

இந்த தனித்த பக்தையின் தனியான எண்ணங்களாம் தெளிந்த இவ்வன்பு ஏரியில் பிரதிபலிக்கும் நாதப்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 449

அமைதியான அன்பெனும் உள்ள ஏரியில் பிரதிபலிக்கும், ஓங்கி உயர்ந்த பண்ணிசைப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 450

உள்ளாழ்ந்தொன்றிய உள்ள ஏரியில் உருநிழற்படிவான நீடமைதி மோனப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 451

உள்ளமைதியாம் பனிமலே ஏரியினில் உள்ளாழ்தலாம் அமைதித்தலத்தில் உருநிழற்படிவான மெய்யறிவாம் வெண்பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 452

மோன அமைதிப்பனிமலேயில் பளபளக்கும் மெய்ப்பண்ணிசை ஏரியான (ஸத்குருதேவ!) 453

மெய்யறிவெனும் உள்ள ஏரியின் மெல்லினிய இசை அலேயான (ஸத்குருதேவ!) 454

அமைதியான உள்ள ஏரியின் அறிவாழமான (ஸத்குருதேவ!) 455

[19] கைலாஸ மலே போகும் வழியிலுள்ள ‘ஓம்’கார மலே

அறிவின்மை எனும் புகைப்படலச்சூழலைப் பிளந்திடும் உயர்ந்த மெய்யறிவுப் பகலவனே/ அறிவின்மையெனும் புகைப்படலம் சூழ்ந்த அச்சுறுத்தும் பிளவுக்கப்பால் நெடிதுயர்ந்த நாதமலை முகடான (ஸத்குருதேவ!) 456

மனோமௌன ஏரியின் அமைதித்தலத்தில் பிரதிபலிக்கும் ஞானபொற்சிகரமான (ஸத்குருதேவ!) 457

இசையெனும் உள்ள ஏரியின் பண்ணெனும் தெளிந்த நீரான (ஸத்குருதேவ!) 458

இறையுணர்வெனும் அழகிய நீலவண்ண நீர் நிறை, அழகிய பண்ணிசையெனும் உள்ள ஏரியான (ஸத்குருதேவ!) 459

உள்ளாழ்தலாம் உள்ள ஏரியினில் தெரியும், மெய்யறிவுப்பனிமலைக்குப் பின்னுதிக்கும் நாதமெனும் பொற்சூரியனே (ஸத்குருதேவ!) 460

இறையுணர்வுடை உள்ள ஏரியினில் கவிதையும் பாட்டும் நடமிடும் அலைகள் ஒளிரச்செய்யும் இசைச்சூரியப் பொற்கதிராகிய (ஸத்குருதேவ!) 461

உள்ளாழ்ந்து அமைதியுற்ற உள்ள ஏரியினில் எழிலுறப்பிரதிபலிக்கும் நாதப்பனிமலைத்தொடரை நேரில் காணச்செய்யும் மெய்யறிவெனும் ஒளிவீசும் வைரக்கதிரவனே (ஸத்குருதேவ!) 462

நாதப்பனிமலையைப் பொன்னொளிரச்செய்யும் ஞானப்பகலவனே (ஸத்குருதேவ!) 463

இந்த பக்தையின் அன்பான எண்ண ஏரியில் பிரதிபலிக்கும், க்ருதிகளாம் உருநிழற்படிவான பனிமலைத்தொடரில் மின்னும் ஆயிரக்கணக்கான அறிவுக்கதிர்களுடை, பண்ணிசைப்பொற்கதிரவனே (ஸத்குருதேவ!) 464

மெய்யறிவுப் பனிமலைத்தொடரின் எதிரில் உள்ளாழ்தலாம் உள்ள ஏரியினின் பேரின்ப நீடமைதியான (ஸத்குருதேவ!) 465

நாதமெனும் மலை அரசனும் இமயத்தில் எல்லையற்ற ஆத்மானந்தமெனும் நீல உள்ள ஏரியான (ஸத்குருதேவ!) 466

எல்லையற்ற ஆத்மானந்தமெனும் நீல உள்ள ஏரியினை எதிர்நோக்கிடும் நாதப்பனிமலை அரசனே (ஸத்குருதேவ!) 467

அலைவற்ற மெய்யறிவாம் உள்ள ஏரியினில் பிரதிபலிக்கும் நாதப்பனிமலையில் பரந்துள்ள இனிய அமைதியான (ஸத்குருதேவ!) 468

அன்பெனும் உள்ள ஏரியின் தெளிந்த தூய நீரில் பிரதிபலிக்கும் குருவாம் இமயமான (ஸத்குருதேவ!) 469

இறையன்பாம் பனிமலையினின்றிழிந்தோடும், இறைவன் திருநாமங்களை இசைக்கும் கங்கையான (ஸத்குருதேவ!) 470

இறையுணர்வெனும் பனிமலையில் நாதப்பொன்னொளியான (ஸத்குருதேவ!) 471

திளைத்திடவேண்டிய, மௌனப்பனிமலையில் மெய்யறிவாம் அமைதிமிக்க உள்ள ஏரியான (ஸத்குருதேவ!) 472

மெய்யறிவாம் உள்ள ஏரியினில் தெள்ளத்தெளிந்த இசை நீரான (ஸத்குருதேவ!) 473

உள்ள ஏரியின் மெய்யறிவெனும் தெள்ளத்தெளிந்த நீரில் பிரதிபலிக்கும் அமைதிப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 474

தெளிந்த உள்ள ஏரியின் கண்ணாடிபோன்ற மேற்பரப்பினில் பிரதிபலித்திடும் பொன்னொளிர் அமைதிப்பனிமலை உச்சியான (ஸத்குருதேவ!) 475

நாதப்பனிமலையின் மெய்ஞான உச்சியான (ஸத்குருதேவ!) 476

நாதப்பனிமலையின் மெய்ஞான உச்சிதனில் தவழ்ந்திடும் 'ஓம்'கார வெண்முகிலான (ஸத்குருதேவ!) 477

நாதப்பனிமலையின் மெய்ஞான உச்சிதனில் தவழ்ந்திடும் 'ஓம்'கார வெண்முகில் ப்ரதிபலித்திடும் ஆழ் அமைதி ஏரியான (ஸத்குருதேவ!) 478

நீடமைதியெனும் ஏரியினில் ப்ரதிபலிக்கும் நாத 'ஓம்'கார முகிலுடை மெய்ஞானப் பனிமலையான (ஸத்குருதேவ!) 479

ஞானப்பனிமலையில் நீடமைதியெனும் ஏரிதனில் ப்ரதிபலிக்கும் நாதத்தின் 'ஓம்'காரவடிவான (ஸத்குருதேவ!) 480

இறையன்புப் பனிக்கோயிலில் நாத 'ஓம்'கார வடிவம் ப்ரதிபலிக்கும் பண்ணிசை ஏரியான (ஸத்குருதேவ!) 481

நீடமைதிப் பனிமலையில் ஞானவெளியில் புல்லரிப்புண்டாகும் 'ஓம்'கார நாத முகிலான (ஸத்குருதேவ!) 482

பேரின்பமெனும் அடர் நீலவெளியினை எட்டும் நாதப்பனிமலையின் பொன் உச்சியான (ஸத்குருதேவ!) 483

அமைதியான உள்ள ஏரியினில் புன்னகைத்து மின்னும், வண்ண ஒளி நடமிடும் இறையன்பெனும் அலைகளில் தூய ஸத்துவத்தின் வெண்மையான, ஞானானந்த ஹம்ஸமான (ஸத்குருதேவ!) 484

நாதகைலாஸநாதர் கூத்தாடும் கீதமெனும் மென்காற்றே! 485

இப்பாட்டெனும் மென்காற்றில் மகிழும் நாதகைலாஸநாத! / தங்கள் கீதமெனும் மென்காற்றில் நாதகைலாஸநாதரை மகிழ்வித்தோய்! 486

இவ்வெண்ணங்களெனும்/உள்ளமெனும் மானஸ ஏரிக்கரையினில் த்யானிக்கப்-பட்ட நாதகைலாஸநாத! 487

பற்றின்மையெனும் பனிமயமான உள்ள முழைஞ்சில் விளங்கும் ஞான வெண்பனிமலை அமரநாத! 488

நாதப்பனிமலையில் பண்ணிசைச்சொல்லெனும் நாமகளும், மங்களந்தரும் திருமகளும் இருமருங்கிலும் காட்சியளிக்கும் மெய்யறிவும் வீட்டுப்பேறுமளிக்கும் ஸ்ரீமந்நாராயணன் நேரில் காட்சிதரும் – வீடளிக்கும் தலமான [20] – மங்களமான திவ்யநாம கீர்த்தனங்கள் செய்த (ஸத்குருதேவ!) 489

கண்டிட்ட, கண்டிடாத திருத்தலங்களின் புண்ணியத்தின் மொத்த உருவான (ஸத்குருதேவ!) 490

நாதவெண்பனிச்சிகரமாம் நினது இடைவிடா தர்ஶனமெனும் ஆத்மானுபவமே முதன்மை அவாவான இவ்வுள்ளத்தின் விருப்பத்தினை நிறைவேற்றும் (ஸத்குருதேவ!) 491

கவிதை உட்கிளர்ச்சி தொடர் அருவியாகப்பொழிகின்ற, புலரி அமைதி எழிலுறும் பனிக்கோயிலே! 492

அழகெனும் பனிக்கோயிலின் அமைதியில் உள்ளுயிர்த்த அருட்கிளர்ச்சியாம் கவிதை எழிற்சிறப்பே! 493

[20] முக்திதாம்

கடவுளின் கட்புலனுகும் வடிவான இமயம், கங்கை, இயற்கை இவற்றின் திவ்ய அழகின் கிளர்வதிர்வுகளில் உணர்ச்சியில் உருகும் இக்கவி உள்ளத்தின் கழிபேருவகையான (ஸத்குருதேவ !) 494

உலகியல் முகிற்கூட்டங்கட்கு மேலே திவ்யானுபவங்களெனும் இமய வானில் உயரப்பறக்கும் உள்ளத்தின் கழிபேருவகையான (ஸத்குருதேவ !) 495

மென்மையான கவி இதயத்தில் உவகையூட்டும், இறைவனின் வெளிப்படைக்காட்சியான, இயற்கையின் தெய்விக அழகான (ஸத்குருதேவ !) 496

இமயம், கங்கை, இயற்கை இவற்றின் அழகில் முழுமையாய்ப் பரவிவிரிந்துள்ள கடவுளைக்காணும் உள்ளத்தின் கனிந்த நுண்ணுணர்வான (ஸத்குருதேவ !) 497

இவ்வுலகவாழ்வாம் புல்லின்மீது முத்துப்போல் நிற்கும் அழகெனும் பனித்துளியால் இதயத்தின் எளிய இன்பத்தில் புலனுகும் தெய்வத்தன்மையான (ஸத்குருதேவ !) 498

இயற்கையில் இறைவனைக்கண்டிடும் இம்மெல்லிய இதயத்தில் உறைந்திடும் நாதப்ரம்மனுன ஸத்குருதேவ ! 499

பற்றின்மையையும் பணிவையும் கற்பிக்கும் இயற்கை வடிவான ஸத்குருவே ! 500

இவ்வுலகிலில்லாத முழுமையை நாடி அலையும் இவ்வுள்ளத்திற்கு ஒரே விடையான புனிதகங்கையின் தூய்மை கொண்ட நல் க்ருதிகளைச்செய்த (ஸத்குருதேவ !) 501

எளிதில் அணுகமுடியாத மலைகள், கணவாய்கள், நதிகள், கடல் இவற்றின் அளவற்ற அழகினை விஞ்சும், தெள்ளிய, நுண்ணிய கவி உள்ளத்து எழிலான (ஸத்குருதேவ !) 502

கடுமையான, ஆபத்துகள் நிறைந்த, அச்சத்தை விளைவிக்கின்ற இமயமலை, கடல் இவற்றின் எல்லையில்லா அழகினை விஞ்சும், இறைவனை நேரிடை உணரச்செய்யும், ஸங்கீதமெனும் பேரின்ப அமுதக்கடலின் ஆழத்தில் மறைந்துள்ள உயிர்நிலை உண்மைகளைத் தெளிவாக்கும் என் குருவாகிய தெய்வமே ! 503

ஹிமாலயம், கங்கை இவற்றின் உவகை கொண்ட, ஆனுல் ஆபத்துகளற்ற, நிலைத்த பேரின்பம் பயக்கும் ஸங்கீதத்தின் அதிதேவதையான (ஸத்குருதேவ !) 504

( ஸ்ரீ)த்யாக(ராஜ க்ருதிகளெனும்) கங்கையில் நீராடிய இந்த பக்தைமுன் விஸ்வரூபமெடுத்து நிற்கும் நாத வெள்ளிப்பனிமலைச்சிகரமே! 505

இத்தனித்த பக்தையின் உள்ளாழ்ந்த அன்பெனும் இவ்வெண்ணங்களாம் கங்கையின் மூலமான இன்பண்ணிசைப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 506

ஒருமுனைப்பட்ட உள்ள ஒழுங்குடன் உள்ளப்பனிமலையில் நாமகங்கைக்கரையில் த்யானிக்கப்பட்ட நாதகுருவே! 507

மோனப்பனிக்கோயிலினில் மனமெனும் கங்கைக்கரையினில் த்யானிக்கப்பட்ட, உருவற்ற 'ஓம்'காரத்தின் உருவான ஸத்குருதேவ! 508

இத்தனித்த ஶிஷ்யையின் அன்புப்பிணைப்பெனும் பனிமலையிலுதித்த, தன்னியல்பிலே தூய, இவ்வெண்ண கங்கையில் அபிஷேகிக்கப்பட்ட குருவர! 509

ஸ்ரீராமனைத் திருநீராட்டும் நிந்தன் க்ருதிகங்கையில் நன்கு திளைந்திட்ட இத்தனித்த ஶிஷ்யையின் உள்ளார்ந்த அன்புத்துதிகளாம் இந்த கங்கையில் நீராட்டப்பெற்ற (ஸத்குருதேவ!) 510

தூய நின் திருவடிகளினின்றுதித்த இவ்வநுராக கங்கையினுல் அபிஷிக்கப்பட்ட, பூஜிக்கப்படவேண்டிய திருவடிச்சிறப்புடைய (ஸத்குருதேவ!) 511

வேறு ஒரு தகுதியும் இல்லாத, ஒருமுனைபட்ட பக்திகொண்ட இத்தனி ஶிஷ்யையின் அன்பான வாக்கெனும் ஆடை உடுத்திய (ஸத்குருதேவ!) 512

இறையன்பெனும் பனிகங்கையின் மலைச்சரிவில் பண்ணின் வண்ணமும் அன்பின் நறுமணமும் படைத்த உள்ள மலர்களாம் இத்திருநாமங்களினுல் அர்ச்சிக்கப்பட்ட/ பக்தியெனும் பனிகங்கையில் நீராடிய இந்த ஶிஷ்யையின் உள்ளன்பும் பண்ணன்பும் உறையும் உள்ளத்தில் மலர்ந்த இந்நாமமலர்களால் அர்ச்சிக்கப்பட்ட (ஸத்குருதேவ!) 513

ஒப்புவமையில்லாத இமயம், கங்கை இவற்றின் மொத்த அநுபவமே இத்தனித்த பக்தையின் அன்பான நைவேத்யமாக ஸமர்ப்பிக்கப்பட்ட (ஸத்குருதேவ!) 514

அன்புடை உள்ளமெனும்/இவ்வெண்ணங்களெனும் கங்கைக்கரையில் மங்களமான கானத்தினுல் தீபாராதனை செய்யப்பட்ட நாத ஹிமாலயமான (ஸத்குருதேவ!) 515

இன்பண்ணின் நறுமணத்தின் உறைவிடமான, இறையன்பெனும் இமயச்சரிவில் மலர்ந்த ப்ரம்மகமலங்களெனும் இவ்வழகிய எண்ணமலர்கள் அர்ப்பிக்கப்பட்ட, இக்களங்கமற்ற கண்ணாடி போன்ற உள்ளத்தில் ஒளிவீசும் ஸத்குருதேவ! 516

ஆழ்ந்த உள்மோனமே உருக்கொண்ட ஸத்குருவே! 517

துன்புற்ற உள்ளத்திற்கு இதம் தரும் நாதத்துள் உள்ள இமயப்பேரமைதியே! 518

இதந்தரும் இமய அமைதியினின்று பெருக்கிடும் இன்னிசையே! 519

இன்னிசையாம் புத்துயிரூட்டும் புதிய தூய இமயக்காற்றே! 520

விடியற்காலை அமைதியெனும் வானத்தில், உள்ளமெனும் நீலப்பின்னணியில் உயர்ந்தோங்கிடும் நாதப் பனிக்கோயிலான (ஸத்குருதேவ!) 521

அசைவற்ற மௌனமெனும் பனிமலையில் மோனத்யானமாம் கங்கை நீராடலால் ஒவ்வொரு விடியற்காலையும் தூய்மைபெற்ற இத்தனித்த பக்தையின் ஒருமுனைப்பட்ட பக்தியினால் அர்ச்சிக்கப்பெற்ற, எந்தன் உயிரும் உயிர்ப்புமான ஸத்குருதேவ! 522

விடியுமுன் இத்தனித்த பக்தையால் ஆழ்ந்து நீராடப்பட்ட புனித தெய்வீக ஸத்கீர்த்தனங்களாகிய அமுத கங்கையே! 523

நின் திருநாமங்களை உரைத்திடுதலாம் கங்கையில் நீராடிய, தனிப்பட்ட இந்த பக்தையினால் விடியற்காலையில் வீணாகானத்தினால் ஆராதிக்கப்பட்ட விக்ரஹவடிவான குருதேவ! 524

வீணாகானத்தில் ஒன்றுபடுதலிலுள்ள இமய அமைதியான; வீணாகானத்தில் ஒன்றுபடுதலின் இமய அமைதியினில் ஒலித்திடும் – வெகு இனிய குரலுடை, நாததேவ! 525

விடியுமுன் நின்முன் இசைக்கப்பட்ட வீணையொலியாம் கங்கையின் நாதத்தோடு கலந்தொலிக்கும், பறவை இனங்களின் இன்னிசையாம் மெல்லினிய மேல்பாலை ஸ்வரங்களின் இன்னொலியான (ஸத்குருதேவ!) 526

பண்ணெனும் கங்கைக்கரையினில் அசையா அன்பெனும் தீப ஒளியால் விடியற்காலையில் ஆராதிக்கப்பட்ட ஸத்குருதேவ! 527

விக்ரஹவடிவினை ஸுஸ்வரகானத்தினால் ஒவ்வொரு நாளும் விடியற்காலையினில் ஆராதிக்கும் கங்காஸ்நானத்தினால் உள்ளத்தூய்மை,

உள்ளோடு ஒன்றல் பேரின்பம் ஆகிய ப்ரஸாதங்களைப் பலனுக அளிக்கும் (ஸத்குருதேவ !) 528

நாதோபாஸனையில் தனிப்பட்ட, ஒருமுனைப்பட்ட பற்றுதல் கொண்ட இந்த பக்தையால், தனிச்சிறப்புடை நின் பற்பல க்ருதிகளாம் ஹிமாலயத்தில், இசைக்கப்பட்ட விடியற்காலை வீணுகானம், தம்பூரா ஶ்ருதியுடன் ஒன்றிப்பாடுதல் எனும் கங்காஸ்னுனத்திருல் பற்பல ராகங்களில் திறமையும் லயத்தில் ஒன்றலும் ஆகிய ஸங்கீதஞானத்தைப் பலனுக அளிக்கும் (ஸத்குருதேவ !) 529

(நிந்தன்) திவ்யநாமகீர்த்தனைகளை கணீரென இனிய ஒலியுடன் பாடுதலாகிய கங்காஸ்னுனத்திருல் பற்பல பாபங்களின் திரள்கள் கழுவப்படச்செய்யும் ஸத்குருவே ! 530

இத்தனி ஶிஷ்யையின் உள்ளொன்றிய ஶ்ருதிலயத்துடனிணைந்த வீணுகானத்திலுள்ள, நாதகங்கையின் 'ஓம்'காரஶ்ருதிலயமான (ஸத்குருதேவ !) 531

ஸ்ரீராமதாரகமந்த்ரத்தின் உள்ளுள்ள இமயநீடமைதியான (ஸத்குருதேவ !) 532

உள்ளப் பனிமலையின் ஆழ் அமைதியில் உள்ள ஸத்குருஸ்வாமின் ! 533

ஸ்ரீத்யாகராஜஸ்வாமி என்னும் பெயருடைய, நாதத்தில் ஓங்கி உயர்ந்த மலையரசனும் இமயமான (ஸத்குருதேவ !) 534

ஸூர்யகுலத்து அரசனுகிய ஸ்ரீராமன் புகழ் பாடுவதில் மலையரசனும் இமயமான (ஸத்குருதேவ !) 535

பேருயர் எண்ணங்களில் பேருயர் இமயமலையின் சிறப்பினை வென்ற (ஸத்குருதேவ !) 536

எனதுள்ள வானில் உயர்ந்து நிற்கும் ஹிமாலயமான குருதேவ ! 537

ஹிமாலயகத்யம் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸங்கீத ஹிமாலயமான (ஸத்குருதேவ !) 538

இக்கத்ய கங்கையின் மூலமான, கானத்தின் உயர் இமயமான (ஸத்குருதேவ !) 539

கானகங்கையின் மூலமான, இக்கத்யகங்கையால் பாடப்பட்ட (ஸத்குருதேவ !) 540

கங்காஸஹஸ்ரமெனும் துதிநூல் அர்ப்பிக்கப்பட்ட, பக்தி உணர்ச்சியெனும் தீபாராதனை செய்யப்பட்ட, உணர்ச்சி, பண், லயம் எனும் மூன்று பனிச்சிகரங்களினின்று பாய்ந்தோடும் நாதகங்கையான (ஸத்குருதேவ!) 541

வேறு துணையற்று நினையே பின்பற்றும் இவ்வுயிருக்கு ஒரே துணையான (ஸத்குருதேவ!) 542

எல்லையுள்ள இவ்வாக்கினால் புகழப்பட்ட, எல்லையற்ற ஞான இமய, நாதகங்கையின் பெருஞ்சிறப்பே! 543

காவேரிக்கரையில் பாடிய, கங்கைக்கரையில் (இந்த ஶிஷ்யையால்) சிறப்பித்துப் பாடப்பட்ட (ஸத்குருதேவ!) 544

பஞ்சநதம் எனும் திருவையாற்றுப் புனிதத்தலத்தில் விளங்கிய, கங்கைநதியின் புனிதத்தலமான ஹிமாலயத்தில் புகழ்ந்து பாடப்பட்ட (ஸத்குருதேவ!) 545

பக்தியுடைய இவ்வெண்ணமலர்களை அணிசெயும் மங்களத்திருவடிகளுடைய/ பக்திமனம் கொண்ட புஷ்பாவின் அணிகலனும் மங்களத் திருவடிகள் கொண்ட (ஸத்குருதேவ!) 546

பக்தியுடை உள்ளமெனும் மலரினால் அணி செய்யப்பட்ட/ பக்தியுடை இவ்வெண்ண மலர்களால் அணி செய்யப்பட்ட குருதேவ! 547

பக்தியுடை இவ்வெண்ண மலர்கட்கு மணமூட்டும் திவ்ய திருவடிகள் கொண்ட/ பக்தியுடை புஷ்பாவுக்கு மகிழ்வூட்டும் திவ்ய திருவடிகள் கொண்ட (ஸத்குருதேவ!) 548

பக்தியுடை இவ்வெண்ண மலர்களில் மகிழப்பட்ட திவ்ய திருவடிகளுடைய/பக்தியுடை இவ்வெண்ணமலர்கள் மகிழப்பட்ட திவ்ய திருவடிகள் கொண்ட/பக்தியுடை புஷ்பாவினால் மகிழப்பட்ட திவ்ய திருவடிகள் கொண்ட (ஸத்குருதேவ!) 549

ஆசார்யதேவ இக்குழந்தை மழலையாம் துதியை ஏற்றருள்க! 550

நினது மங்களமான திருவடிகளைச் சரணடைகிறேன்! 551

நின்னையன்றி வேறெங்கும் (செல்வது) அறியேன்!

நீயன்றி வேரெவர் கதி!

நின்னைக்காணும் ப்ரஸாதம் அளித்தருள், எனதெல்லாமே ஆன குருதேவ!

என்னுடன் உரையாடி அருள்க!

என்னுடன் எப்போதும் நிலைத்திருந்து அருள்க!

பூஜிக்கப்படவேண்டிய நின் திருவடி இணைதனை விடேன்!

என்னை விடுவித்தருள்க!

மங்களமான ஆசார்யதேவ, என்னை ஏற்றுக்கொள்க!

அப்படியே ஆகுக!
உனக்கு மங்களம்!

ஓம்

களிப்பூட்டும் நாதகங்கையான, ராமனுகிய கங்கையில் மகிழும், இந்நாமகங்கையின் சிறப்பான த்யாகராஜருக்கு மங்களம்.

ஓம்

ஓம்
ஸ்ரீராமஜயம்

# ஸத்குரு மங்களாஷ்டகம்

ஹிமாலயகத்யத்தில் மகிழ்வுறுபவருக்கு; ஹிமாலயகத்யத்தில் கோவில் கொண்டுள்ளவருக்கு; ஹிமாலயகத்யத்தை அருளியவருக்கு—குருதேவருக்கு மங்களம். 1

இமயமென உயர்ந்த நற்குணம் படைத்தவருக்கு; இமய உச்சியெனும் நற்கீர்த்தி படைத்தவருக்கு; பனிமலை கங்கையேயான இன்ச்ஹொல்லிச்ஹை படைத்தவருக்கு—குருதேவருக்கு மங்களம். 2

இமயத்தின் மோன அமைதி படைத்தவருக்கு; பனிகங்கையின் நற்றூய்மை படைத்தவருக்கு; இமய அமைதியை அளிப்பவருக்கு—குருதேவருக்கு மங்களம். 3

இமயத்தலங்களின் புண்ணியம் படைத்தவருக்கு; மலர் நறுமணமென இனிய கீதம் இசைத்தவருக்கு / புஷ்பாவினுல் மகிழ்வுடன் பாடப்பட்டவருக்கு; நாராயணனை இனிது பாடியவருக்கு—குருதேவருக்கு மங்களம். 4

இமய தேவதாருவென இனிய கீதம் படைத்தவருக்கு; புள்ளினங்களின் இன்னிசையாய் இறைவன் திருநாமத்தை ஒலித்தவருக்கு; இன்னறுமணம் கொண்ட இமயக்காற்றும் க்ருதிகள் படைத்தவருக்கு—குருதேவருக்கு மங்களம். 5

கண்ணுடியென தெளிந்த இமய ஏரியே ஆனவருக்கு; ஏரியில் ப்ரதிபலிக்கும் எழிற்பனிமலையானவருக்கு / பண்ணிலும் தாளத்திலும் இமயமலையே ஆனவருக்கு; குரலில் மங்கள கங்கையை உடையவருக்கு (பெருக்கிடும் கங்கையென இசைபடைத்தவருக்கு)— குருதேவருக்கு மங்களம். 6

நீலவானுய் விளங்குபவருக்கு; அதனில் தூயவெண்முகிலானவருக்கு; இக்குழந்தை மழலையில் மகிழ்பவருக்கு—குருதேவருக்கு மங்களம். 7

இமயப்பெருமை படைத்தவருக்கு; மிக உயர்ந்த பாட்டுக்கள் படைத்தவருக்கு; ஸத்குரு த்யாகராஜருக்கு; எனக்கு எல்லாமே ஆனவருக்கு—நல்மங்களம். 8

ஓம்
மங்களம்

